கழக வெளியீடு-ககூ



உ

சிவமயம்

சாத்திர சங்கிரகம்

என்னும்

# நூற்றொகை விளக்கம்

## பொதுவியல்

சென்னைப் பல்கலைக் கழக உறுப்பினராயும்,
திருவனந்தபுரம், மகாராஜா கல்லூரியில்
அறிவுநூற் புலவராயு மிருந்து காலஞ்சென்ற
ராய்பகதூர்,
**P. சுந்தரம் பிள்ளை யவர்கள், M.A.,**
F.M.U., F.R. H.S., M.R.A.S.,
இயற்றியது.

[இரண்டாம் பதிப்பு]



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி     தாது௵ மார்கழீ௴     & சென்னை.

# பதிப்புரை

---

'நூற்றொகை விளக்கம்' என்னும் இந்நூல் இற்றைக்கு ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் திருவனந்தபுரம் 'மகாராஜா கல்லூரி அறிவுநூற்புலவர் திருவாளர் ராய் பகதூர் P. சுந்தரம் பிள்ளை, M.A., F.M.U., F.R.H.S., M.R.A.S. அவர்களால் தற்கால நிலைமைக்கேற்ப நூல்களை எத்துணை வகுப்பாய் வகுக்கலா மென்பதும், அவற்றின் சிறந்த முறைமையும் பொருளும் என்ன என்பதும் ஆம்வகை யெடுத்து விளக்கக் கருதி எழுதப் பெற்றதாகும். இதில் மதநூல், போதுநூல், கலைநூல் என்ற முப்பாகுபாட்டில் முதல்நூல், வழிநூல், சார்பு நூல், போதுக்கலை, யோககலை ஆகிய பிரிவுகளின் தலைப்பில் தத்துவநூல் முதல் ஞானயோகம் இறுதியாக பலநூல்களின் முறை, பொருள் முதலியன சில்வகையெழுத்தில் திட்பநுட்பஞ் செறிந்த சூத்திர யாப்பால் 38 சூத்திரங்களில் அமைத்து விளக்கப் பெற்றுள்ளன. இச்சூத்திரங்களின் விளக்க நடை தத்துவ நூல் முதலிய நூல்களில் அமைந்த (Technical terms) சங்கேத மொழிகளின் விரிவுரையாக விளங்குகின்ற காரணத்தால் தூய தனித்தமிழ்ப்பற்று மிகுந்தவர் விரும்பும் நடையில் அமைந்தில வென்பது தெளிவு. எனினும் நீண்ட நாளாகப் படிக கிடைக்காமல் வருந்திய அறிஞர்கள் குறையை நிறைவுசெய்வான், ஆசிரியரவர்களின் அருமைப் புதல்வர் திருவனந்தபுரம், திருவாளர் T. S. நடராச பிள்ளை அவர்கள் இசைவு பெற்று, இவ்வாசிரியர் திறம் விளக்கும் 'மனோன்மணீயம்' என்னும் உயரிய நாடகத்தைக் கழக வெளியீடாக வெளியிட்டிருப்பதுபோல இந்நூல் வெளியிடுவதுடன் அவர்கள் இயற்றிய 'ஞானசம்பந்தர் கால ஆராய்ச்சி' 'பத்துப்பாட்டின் ஆங்கில மொழிபெயர்ப்பு' 'நம்பியாண்டார் நம்பி கால ஆராய்ச்சி' முதலிய கட்டுரைகளையும் அச்சிட்டு வெளிப்படுத்த முயன்று வருகின்றோம்.

ஆகவே, இந்நூலின் முதற்பதிப்பிற்கும் இதற்கும் வேறு பாடின்று. ஆனால் பயில்வார்க்கு உதவியாக சூத்திரமூலம் தனியே தொகுத்து அச்சிட்டிருப்பதும், பொருளடக்கம் ஒன்று சேர்த்திருப்பதும் சிறப்பானவை. இந்நூல் முகவுரையில் ஆசிரியரால் குறிக்கப் பெற்றிருக்கிறபடி சில தலைமையான சாத்திரங்களின் சிறந்த முடிபுகளை விளக்கி 'நூற்றொகை விளக்கத்தின்' ஒவ்வோரியலாக வெளிப்படுத்தும் கருத்து எமது கழகத்தார்க்கு உண்டு. எல்லாம் வல்ல இறைவனருளால் அவை நிறைவேறுங் காலத்தை எதிர்பார்க்கின்றோம்.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்தார்.

## AUTHOR'S PREFACE

---

The following essay aims at giving in Tamil, the chief features of Modern Science, together with a classification of the Departments of Knowledge, as conceived by the undersigned. It was written and delivered as a lecture, in the College Hall, Trivandrum, in pursuance of a Scheme of Public Lectures, recently instituted by the Travancore Government. It is published, in the hope, that it will be found useful as an attempt, however humble, in the way of expanding the capacity of the Tamil Language, as a vehicle of Scientific thought. Written, as it was, in haste, amidst other pressing duties, the work is, no doubt, capable of much improvement, both in expression and arrangement. If, however, the general plan of this introduction is approved, other essays will follow, dealing with the fundamental principles of some, at least, of the leading Departments of Knowledge here referred to, as time and circumstances permit.

*Trivandrum,*
*May* 1888

P. SUNDARAM PILLAY, M.A.

# முகவுரை

---

தற்கால நிலைமைக்கேற்க சாஸ்திரங்களை எத்தனை வகுப்பாய் வகுக்கலாமென்பதும் அவற்றின் முக்கிய முறைமையும் விஷயமும் என்ன என்பதும் ஆம்வகை எடுத்து விளக்குவதே, கீழ்வரும் நூற்றேகைவிளக்கம் பொதுவியலின் தலைமையான உத்தேசம். இது திருவிதாங்கோட்டுக் கவர்ன்மென்ருருடைய நூதன பிரசங்க ஏற்பாட்டின்படி ஓர் உபந்நியாசமாக எழுதப்பட்டு, திருவனந்தபுரம் சர்வகலாசாலையில் வாசிக்கப்பட்டது. வேறுபல வேலைகளினிடையில் அவசரமாய் எழுதப்பட்டமையால், சொற்குற்றம் முறைவழு இவை இப்பொதுவியலில் இல்லாதன ஆகா; ஆயினும் ஆன்றோர் அவற்றை ஒழித்து இச்சிறு நூலைப் பொதுவாக அங்கீகரிப்பாராயின், இதிற் குறிக்கப்படும் சில தலைமையான சாஸ்திரங்களின் முக்கிய முடிபுகளை இவ்வாறே விளக்கி இந்நூற்றெகை விளக்கத்தின் ஒவ்வோர் இயலாக இயற்ற வேண்டுமென்னுங் கருத்துடன் இது வெளியிடப்படுகிறது.

திருவனந்தபுரம்,
௧௲௬௩௵
மே ட ர வி,

பி. சுந்தரம் பிள்ளை.

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| க. | நூற்பொருள் விளக்கம் | |
| | மேற்கோள் நூலகராதி | சு |
| உ. | நூற்றொகை விளக்கம் | |
| | பொருள் அட்டவணை | கக |
| ங. | நூற்றொகை விளக்கம் | |
| | சூத்திரம் | கங. |
| ச. | நூல் | க |
| ரு. | அநுபந்தம் I | 1 |
| சு. | அநுபந்தம் II | 4 |


---

நூற்ருெகை விளக்கம்

## மேற்கோள் நூலகராதி

அஞ்ஞவதைப்பரணி
அமிர்தசாரம்
அருட்பிரகாசம்
அவிரோதவுந்தியார்
இராமாயணம்
ஈசுரகீதை
ஒழிவிலொடுக்கம்
கந்தரலங்காரம்
குமாரதேவர் விஞ்ஞானசாரம்
சசிவர்னபோதம்
சிவானந்தமாலை
ஞானவாசிட்டம்
தத்துவராயர்—பாடுதுறை
தாயுமானவர்
திருக்குறள்
திருமந்திரம்
திருவம்மானை
திருவாசகம்
திருவாய்மொழி
நன்னூல்
பகவற்கீதை
பட்டினத்துப் பிள்ளையார்
பாடுதுறை
பிரபுலிங்கலீலை
பிரபோதசந்திரோதயம்
முண்டகோபநிடதம் (பிரம கீதை)
Mind. Vol IX
மோகவதைப்பரணி
வீராகமம்.

# நூற்றொகை விளக்கம்

## பொருள் அட்டவணை

---

| | | பக்கம் |
|---|---|---|
| அகேவலம் என்பதனிலக்கணம் | ... | கஉ |
| அணுவினிலக்கணமும் அதன் பிரிவுகளும் | .... | உங |
| அணுவினியக்கமும் அதன் விளைவும் | ... | உரு |
| அந்தக்கரண சதுஷ்டயம் | ... | சரு |
| அறிவும் நூலும் மும்மூன்று வகையெனல் | ... | ங |
| இடப்பெயரிலக்கணமும் அதன் பிரிவுகளும் | ... | உ0 |
| இயக்கமும் ஆகாயமும் | .... | உ0, உக |
| இயக்கத்திற்குச் சத்தியே காரணம் எனல் | ... | உஉ |
| இயக்கநூல், சத்தி நூலெனப் பெயர் பெறல் | ... | உசூ |
| இராசாயன நூலினியல்பும் அதன் பிரிவுகளும் | ... | உகூ |
| உண்ணல் என்பது உயிரின் முதற் றொழில் | ... | ஙரு |
| உயிர் தாவரம் சரமென இருவகை | ... | ஙஉ |
| உயிரிலக்கணம் மூன்று என்பதற்குள்ள காரணம் | ... | ஙசூ |
| உயிர் நூலி னிலக்கணம் | ... | ஙகூ |
| உளத்தி னிலக்கணம் | ... | சங |
| உளநூல் | ... | சகூ |
| உறுப்பும் உடலும் | ... | ஙச |
| உற்பாதனம் என்பது உயிரினிரண்டாவது தொழில் | ... | ங.சூ |
| எண்ணுக்கும் அளவுக்குமுள்ள வேற்றுமை | ... | கஅ, ௲கூ |
| ஐக்கிய முயக்கம் | ... | உஎ |
| கணிதமும் அதன் விளக்கமும் | ... | கஎ |
| கலையினிலக்கணமும் அதன் பிரிவுகளும் | .... | ருச |
| கேவலம் பசுத்தன்மை | ... | கக |
| கேவலத்தன்மையினியல்பும் அதன் விளக்கமும் | ... | க0, கஉ |
| சரப்பொருளி னிலக்கணம் | ... | ஙசூ |

| | | |
|---|---|---|
| சாங்க இயக்கமும் அதன் பிரிவுகளும் | ... | உக |
| சார்பு நூலின் இலக்கணம் | ... | ருO |
| சார்பு நூல்களின் பிரிவுகள் | ... | ருக |
| தத்துவமும் அதன் விளக்கமும் | ... | கசூ |
| தாவரம் என்பது மரங்கள் மட்டுமன்று | ... | ௩எ |
| நற்கலைக ளிவையெனல் | .... | ருசூ |
| நூலறிவு மூன்றுவகைப்படுமெனல் | ... | எ |
| நூலென்பது அறிவினையுணர்த்துங் கருவி | ... | ௩ |
| நூலொழுங்கின் முதல் விதியினியல்பு இவை எனல் | ... | கூ |
| நூலொழுங்கின் இரண்டாவது விதியினிலக்கணமும் ... அதன் பிரிவுகளும் | ... | கூ, ய |
| நூலொழுங்கின் மூன்றாவது இலக்கணம் | ... | கஉ |
| நூலுக்குப் பொதுவொழுங்கும் அதன் பிரிவுகளும் | ... | கூ |
| புலன்—புலால்விளக்கம் | .... | ௩எ |
| பேரறிவு என்பது இரண்டற அறிதல் | ... | ச |
| பேரறிவு, ஞானம் | ... | அO |
| பொதுக்கலை | ... | ருஅ |
| பொதுநூலி னிலக்கணம் | ... | சூ |
| பொதுநூல் முதல்வழி சார்பென மூவகைப்படும் | .... | க௩ |
| மதநூல் ஆத்திகர் விதி கூறுவது எனல் | .... | ரு |
| முதனூல் அறுவகைப்படும் எனல் | ... | கரு |
| முதனூலி னிலக்கணம் | ... | கச |
| யோககலையும் அதன் சாதனங்களும் | .... | கூO |
| யோகநற்கலையும் அதன் பயனும் | .. | எஅ |
| வழிநூலி னிலக்கணம் | ... | சஅ |
| வழிநூற் குதாரணம் | ... | சஅ |
| வியாகரணமும் ஒரு வழிநூலேயாம் | ... | ருO |
| வெம்மை, ஒளி, மின்மயமுதலான குணங்கள் அணு ... வின் இயக்கமே | ... | உசூ |
| வெறுங்கலவை | ... | உகூ |

———

உ

சிவமயம்

# நூற்ெறுகை விளக்கம்

## பொதுவியல்

### தெய்வ வணக்கம்

திருவரு ளன்றித் தெரிவுறற் கரிய
வொருவனை வணங்கியிங் கோதுவன்
விரிவுறு நூற்றெகை விளங்குநல் லியல்பே.

### சூத்திரம்

க. அறிவினை யுணர்த்துங் கருவிநூ லென்ப.

உ. அறிவுபே ரறிவுசிற் றறிபுல னறிவென
மூவகை யதனுன் முறையே நூலும்
மதம்பொது கலையென வகைமூன் ருமே.

ந. பேரறி வென்ப திரண்டற வறித
லனுபவ மன்றிமற் றகோசர மதுவே.

ச. மதநூ லதனு லாத்திகர்க் கேற்ற
விவித சாதனம் விதித்திடு மென்ப.

ரு. இருவகைக் கரணமு மொருவழிப் படர்தல்
சிற்றறி வதுநூற் குச்சிறப் பென்ப.

சு. உண்மை பொதுமை யொழுங்கென மூன்று
திண்மைசேர் அறிவின் செறிவே பொதுநூல்,

எ. எடுத்த மொழிகட் கிலக்கணங் கூறல்
வெளிப்படை கூறிமே லல்லன விளக்கல்
கேவலங் கூறிமே லகேவலங் கிளத்த
லெல்லா நூற்கு மிவைபொது வொழுங்கே,

அ. தானே விளங்குந் தனித்தா பிதமுங்
கற்போர்க் கெளிதா மிலகுதா பிதமுமென்
றிருகூ றுடையது வெளிப்படை யென்ப.

கூ. தனிப்படப் பண்பு சாற்றல் கேவலமே.

க0. பண்பார் பிண்டம் அகேவல மென்ப.

கக. முதல்வழி சார்பென மூவகை பொதுநூல்.

கஉ. முதனூ லான்ற முடிவுடன் மொழிந்த
இலக்கண நிரம்பத் துலக்கிடு மென்ப.

கஙு. இலங்கிடு மிருக்கையு மெண்ணே டளவு
மிருவகை யியக்கமு மைக்கிய முயக்கமு
முயிரு முளனுமென் றறுவகை முதனூல்.

கச. இருக்குகை விளக்குநூல் தத்துவ மென்ப.

கரு. எண்ணே டளவுநூல் கணித மென்ப.

கசூ. இயக்க மென்ப திடப்பெயர் வஃதுஞ்
சாங்க மணுவென வீங்கிரு பாற்றே.

கஎ. சாங்கஞ் சாமிய மசாமிய மெனவிரு
பாங்கா நிலநீர் கால்சே ரா்வழி.

கஅ. அணுவெனப் படுவது பிரிபடாப் பகுதி
மூலங் கலப்பென வாமிரு வகையே.

ககூ. ஆனுமா னீக மணுவி னியக்கம்
வெம்மை யொளிமின் மயமதன் பயனே.

உ0. இயக்கநூல் சத்திநூ லெனப்பெயர் பெறுமே.

உக. நிறையொழி பண்பெலாம் பிறழ்தரச் சரிமுறை
யளவிற் பிறழா வாகி யணுவின
மிரண்டறக் கலத்த லைக்கிய முயக்கம்,

உஉ. முயக்கநூ விரசா யனமா மதுவு
மியல்புசா ரீர மெனவிரு வகையே.

உ௩. உறுப்போ டமைந்த வுடம்புடைத் தாகி
யுண்ணலுற் பாதனம் பண்ணுயிர் யாவுந்
தாவரஞ் சரமென வாமிரு வகையே.

உ௪. உண்ண லென்பது தன்மயப் படுத்தல்.

உ௫. தனைப்போற் பிரதி சமைத்தலுற் பாதனம்.

உ௬. புலன்புலால் படைத்த வுடம்புடைத் தாகி
யுணர்தலுஞ் சலித்தலு முடையன சரமே.

உ௭. அங்க விபாகமு மவற்றின் றொழிலுங்
கருமுதன் மரணம் வரையுறு கதியுஞ்
சாதியுட் சாதி யாம்வர லாறுந்
தாவரஞ் சரமெனு மிருபா லுயிர்க்குங்
கூறுநூ லுயிர்நூ லெனக்கூ றுவரே.

உ௮. தான்பிற ரெனவறி கரண முளமே.

உ௯. உளநூ றத்துவ நூலோ டொன்றும்.

௩0. முதனூல் பலவின் பொதுவிதி யொழுங்காய்ச்
சிறப்பிற் சிற்பொருட் கேற்புடைத் தாக்கி
யொருவழிப் படுத்தல் வழிநூன் மாண்பே.

௩௧. சோதிடம் பௌமியந் தொல்வியா கரண
மெனவழி நூற்குதா ரணம்பல வுளவே.

௩உ. முதல்வழி நூற்களின் முடிபுணர்ந் தவையுடன்
கைவரும் வகையொரு செய்வினைக் கமைத்துத்
துணைசெயல் சார்புநூற் றொழிலென மொழிப.

௩௩. தருக்கந் தருமஞ் சிற்ப நாவிகந்
தனுராயு ளாதியாச் சார்புநூல் பலவே.

௩௪. வாசனை வைபவங் கலையா மதுவும்
பொதுவுடன் யோகமென் றிருகூ றுகு
நற்கலை விகற்ப நணுகா வழியே.

நடு. இதேசித் திரங்கவி யாதிய பொதுவுண்
ணலனோர் பயத்தலி னற்கலை யென்ப.

நசு. இயற்கையும் பயிற்சியு மியைந்திடக் கரணம்
வியப்புறச் சில்வழி விரிந்துமற் றொடுங்கல்
சொலற்கரும் யோகமென் றுரைக்கவும் படுமே.

நஎ. ஆனந்த மேயுரு வாக்கிடும் ஞான
யோகமும் யோகத் தொருநற் கலையே.

நஅ. பேரறி வின்னருட் பிரேரக மாதலின்
ஞானமு மதமுடி வாமென நவில்ப.

ஓம்தத்சத்

தொடர்புறு மிந்நூற் றொகைச்சுடர் மண்டல
மெப்பரம் பருக்கர்க் கியைபரி வேட
மப்பொருட் கனுதின மகிலமங் களமே.

குருசுந்தர சரணாலயம்

முற்றிற்று

—

உ

சிவமயம்

# நூற்றொகை விளக்கம்

## பொதுவியல்

### தெய்வவணக்கம்

திருவரு ளன்றித் தெரிவுறற் கரிய
வொருவனை வணங்கியிங் கோதுவன்
விரிவுறு நூற்றொகை விளங்குநல் லியல்பே.

ஆராய்ச்சிசெய்து நம்மால் அறியத்தக்கவைகள் அளவற்றவைகள். அவற்றுள் அநேக விஷயங்களை ஹிந்துதேச வாசிகளாகிய நம்முடைய முன்னோர்கள் வருந்தி உணர்ந்தவரே என்பது அவர்கள் வடமொழி தென்மொழிகளில் செய்திருக்கும் நூல்களில் சிறிதேனும் ஊடாடின யாவர்க்கும் தெரியவரும். நன்றாய் அந்நூல்களை உய்த்துணர்ந்த வித்துவான்கள் நம் பூர்வீகர்களுடைய புத்தி நுட்பத்தையும், விஷயங்களின் உண்மையை அறிய உழைத்திருக்கும் உழைப்பையும், அவற்றால் விளைந்திருக்கும் பிரயோசனத்தையும் குறித்துப் புகழ்ந்து பேசுவதோடு தற்காலத்திலுள்ள ஹிந்துக்கள் பெரும்பாலும் நூதன பாஷைகளையும் நூதன சங்கதிகளையும் அதிக வருத்த மின்றிக் கற்றுத் தேர்ச்சி அடைகிறதற்கு, அம் முன்னோர்களுடைய கல்விப்பயிற்சியால் ஜனித்த தேசவாசனையே, பன்னூற்றாண்டாயும் மாயாது நின்று உதவி செய்கின்றதென்றும் துணிகின்றார்கள். இம்மதிப்பு மேன்மேலும் வளர்ந்தோங்குக என்றே வாழ்த்தத் தக்கதாயும் இருக்கின்றது.

ஆயினும், ஹிந்துதேசம்போல பூமியில் வெகு தேசங்கள் உளவென்றும், மதிநுட்பமும் விஷயங்களை அறியவேண்டியதற்குரிய இச்சையும் உழைப்பும் மனிதர்களுக்குப் பொதுவான குணங்களேயொழிய ஒருநாட்டிற்றானே உற்பத்தியாகிற சாத

னங்கள் அல்லவென்றும் உணர்ந்தவர்கள் அந்நிய தேசவாசிகள் வழியாயும் நாம் அறியத்தக்கவை பலவும் இருக்கும் என்று ஒப்பாதொழியார். அப்படி ஒப்புதல் நமது முன்னோர்மேல் வைக்கத்தக்க பத்திக்கு இழுக்கும் அன்று. குழந்தைகள் தங்களுக்கு எட்டாத உயரமான ஒருபொருளைச் சுட்டி அது அண்ணனுக்கு எட்டும், அப்பாவுக்கு எட்டும், எட்டாதென்ற வாக்குவாதத்தில் "ராஜாவுக்குக்கூட எட்டாது, எட்டும்" என்ற மழலை மொழியோ உண்மையான இராஜபக்தியை விளக்கும்? கேவலம் மதிநுட்பத்தால் மாத்திரமன்றித் தூரதேச சஞ்சாரத்தாலும் கருவி விசேஷத்தாலும் விளைகிற அனுபவப் பெருக்கால் அறியத்தக்கவைகள் பூமியின் பாலிய காலமாகிய பழைய காலத்தில் அறியப்படவில்லை என்று கூச்சம் இன்றிக் கூறுவதில் குறைவென்னை? ஒரு தேசத்தார் விஷயாராய்ச்சி விட்டு யாதேனும் ஒரு காரணத்தால் ஒய்வடைந்தாராயின், மற் றெல்லாத்தேசத்தாரும் அப்படியே ஒய்வடைந்தவர் ஆகவேண்டியதில்லையே! வித்தியாரூபிணியாகிய கலைமகள் நாடோறும் தூக்கமின்றிக் கல்வி பயிலுகிறாள் என்பதின் பொருள்தான் என்னை? ஆதலால் பூர்வீகர்கள்மேல் உண்மையான பக்தியும் தேசாபிமானமும் உடையோர், முன்னோர் நூல்களை அன்போடாராய்வதோடு, நூதனமாக அந்நிய தேசத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் நூல்களையும் கற்றறிந்து கலந்து "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" * என்னும் முதுமொழியை மறவாது, அவர் அவர்களால் கூடிய அளவும் நம் முன்னோர் உழைத்தபடி உண்மை அறிய உழைத்து, ஜனசமுதாய அறிவை வளர்க்கக் கடமைப்பட்டவர்களாக இருக்கின்றார்கள். அவ்விதமான முயற்சிக்கு நூல் என்பதன் இயல்பும், அந்நூல்கள் கூறுபடும் தொகை வகைகளையும் பொதுவாக நிர்ணயித்துக்கொள்ளல் இன்றியமையாத சாதனங்களில் ஒன்றாய் இருப்பதால், அவற்றை நம்மால் இயன்றமட்டும் சுருக்கி விசாரிப்போமாக.

---

* நன்னூல்.

## சூத்திரம்

### க. அறிவினை யுணர்த்துங் கருவி நூ லென்ப.

'நூல்' என்பது அறியவேண்டியவற்றை அறிவிக்கும் ஓர் கருவி. சதுர்வேதமுதல் பல்வியின் குரல் முதலியவற்ருல் நேரிடுகிறவைகளைத் தெரிவிக்கும் பல்லிசாத்திரம்வரை, கற்கக் கூடிய எல்லாவற்றிற்கும் நூல் எனும் தமிழ்ப்பெயர் பொருத்தம் உடையதாக இருக்கின்றது. இவ்வழக்கத்தை அனுசரித்துப் பார்க்கும்போது, நூல் என்பது யாதேனும் ஒன்றை வரன்முறை அறிவிக்கும் கருவியெனக் கூறலாகும். ஆதலால் நூலின் முதற் பிரயோசனம் அறிவே. "அறம் பொருளின்பம் வீடடைத னூற் பயனே" * என்பதை இதனுல் மறுத்ததன்று. அவைகளுக்குப் பாம்பரா சாதனமாவதன்றி, நூல் கற்றவுடன் பயப்பது அறிவே. அவ்வறிவைத் தக்க வழி செலுத்தின் அடையக் கூடியவை அந்நான்கும். நூலுக்குச் 'சாத்திரமென்பது' பொது வான வடமொழிப் பிரதிபதம் ஆகலாம். சாஸனம் சம்ஸனம் என்னும் இரண்டு அடிகளும் பொருத்தமுடையவை ஆதலால் வழக்கத்தில் வேதம் சாத்திரம் புராணம் என்ற பிரிவில் தோற் றும் சிறப்புப் பொருள்களை நீக்கிப் பொதுவாக எதனையாவது வரன்முறை சாஸித்து ஒழுங்குபடுத்தி அறிவிப்பது என்ற பொது அர்த்தத்தைமாத்திரம் தருவதாகக் கருதில் சாத்திரமும் நூலும் ஒரு பொருளுடையனவேயாம்.

### உ. அறிவுபே ரறிவுசிற் றறிபுல னறிவென
### மூவகை யதனுன் முறையே நூலும்
### மதம்பொது கலையென வகைமூன் ருமே.

அனுபவசித்தமான அறிவை இன்னதென்று இலக்கணங் கூறிக் காட்டல் அரிது. ஆயினும் நூல்களை வகுத்துப் பிரிப்ப தற்காக அறிவினை மூவகையாய்க் கூறுபடுத்தி விவரிக்கவேண்டிய தாக இருக்கின்றது. இதன்பொருட்டே முன்னோர்களும் அறிவை 'வாசாசாத்தியம்' 'கிரியாசாத்தியம்' எனப் பிரித்து, முன்னதை வேதம்-ச, அங்கம்-சு, மீமாம்சம்-க, நியாயம்-க, புராணம்-க, தருமம்-க ஆக கச வித்தைகளாகவும், சிலர் ஆயுர்வேதம் தனுர்வேதம் காந்தர்வம் அர்த்தசாஸ்திரம் இவை

---

* நன்னூல்.

களைச் சேர்த்து சஅ வித்தைகளாகவும், பின்னதை சூசதலைக ளாகவும் வகுத்துக் கூறுவர். வாசாசாத்தியம் கிரியாசாத்தியம் என்ற பிரிவு ஆழ்ந்து பார்க்குந்தோறும் எவ்வளவும் நிராக்ஷேப மாக நிலைநிற்கத் தக்கதேனும், * உபநிடதங்களில் குறிப்பிக்கப் பட்டிருக்கின்ற பிரமவித்தையானது வாக்கு மனங்களுக்கு அவி ஷயமான பரவித்தை என்றும், வேதாதியனைத்தும் அபராவித்தை என்றும் நம் முன்னோர் தாமே பிரித்துக் கூறுவதினாலும், வேத மும் வேதாங்கங்களில் சிலவும் ஒருவித ஆத்திகர்களுக்கன்றிப் பொதுப்பட யார்க்கும் பொருந்தாமையாலும், நூதனமான பற் பல நூல்கள் ஏற்பட்டிருப்பதனாலும், அவை கேவலம் வாக்கு மாத்திரத்தினால் சாத்தியமல்லாதவை ஆதலாலும், இப்பிரிவைச் சற்றே பேதப்படுத்தி இக் காலகதிக்கு ஒக்கச் செய்தல் அவர்கள் கருத்திற்கு விபரீதமன்று. ஆதலால் இவ்விடத்தில் அறிவிற்கு சாதனமான துணைக்காரணங்களை முன்னிடாது, அதுவே தன் னியல்பில் எத்தனை வகைப்படும் என நோக்குங்கால், 'பேரறிவு' 'சிற்றறிவு' 'புலனறி'வென மூன்று கூறுகு மென விளங்கும்.

௩. பேரறி வென்ப திரண்டற வறித
லனுபவ மன்றிமற் றகோசர மதுவே.

இவற்றுள் 'பேரறிவு' என்று கூறுவது தான் பிறர் என்ற துவித நாட்டம் அற்ற அறிவு. அறிபவனாகிய தானும் தனக்குப் பிறிதாக எதிர்ப்படுகின்ற அறிபொருளும் என்ற திருக்கு திரி சிய வேற்றுமையுடையது, நமக்கு எப்போதும் இயல்பாய் இருக் கின்ற அறிவு. இப்படி அறிவான் அறிவு அறிபொருள் என்ற திரி புடி வேற்றுமை அற்ற அறிவு ஒன்றுளதென்று நம்முடைய வேதா கமங்கள் வெளிப்படுத்துகின்றன. இதற்கு நிரகங்காரஞ்ஞானம் திரிபுடிரஹிதஞ்ஞானம், சிவபோதம், நிருபாதிகபோதம் என் றிப்படிப் பேர் கூறுவது வழக்கம். தமிழ் நூலோர் அதனையே பேரறிவெனக் கூறுகின்றனர். இது நமது தேச மகான்களால் மாத்திரம் அன்றி ஜர்மன்தேச வித்துவான்களில் சிலராலும்

* "இங்கு நாமறிய வேண்டுவதிரண்டு விச்சையவ் விரண்டினு ளொன்று, பங்கமா மபரை பரையெனப் படுவதொன்றதிற் பழமறை நாலு, மங்கமாறுண்மை யமையிதிகாச மாதிகளபரையா மற்ற, தெங்குமாய் நின்ற தொன்றையா தொன்றுலெய்தலா மதுவிறை யருளால்." முண்டகோப நிடதம் :—பிரமகீதை.

அங்கீக்ரிக்கப்படுகின்றது. இந்தப் பேரறிவு பரம்பொருளுக் குரித்தெனவும், அஃதுடையோரே அபரோக்ஷமாகப் பிரம சாக்ஷாத்காரம் அடைகின்ருர் எனவும், மேற்கூறிய இருதிறத்தா ரும், ஒருவர்க்கொருவர் சம்பந்தம் அற்றவர்களாயிருந்தும் ஐய மறத் துணிகின்ருர்கள். பத்திமார்க்கிகளாகிய மற்ற மதத்தர் களும் இதுபோன்ற வாக்கால் கூற ஏலாத ஒவ்வொரு ஆன்ம நிலைமையால், தத்தம் தேவதைகளின் பிரசாதத்தை அடையலா மென்று நம்புவதாகவே, அவரவர் கொள்கையை ஆதரவாய்ப் பரிசோதிக்கும் விஷயத்தில் தோற்றும். அப்பரிசோதனைக்கு இஃது இடமன்று. எவ்வித சங்கேத வாக்குக்களால் கூறினும், இம் மதத்தர்கள் யாவரும் அவரவர் சொல்லுகின்ற ஆன்ம நிலைமை, அனுபவத்தால் வருவதேயன்றி, மனோவாக்குக்களுக்கு கோசர மல்லவென்று பொதுவாய்த் துணிகின்ருர்கள்.

## ௪. மத நூலதனு லாத்திகர்க் கேற்ற விவித சாதனம் விதித்திடு மென்ப.

இப்பேரறிவு விவகார வழியாய் நிரூபிக்கத்தக்கதன்று. அஃது "* சுருதிக ளொருகோடி சொல்லினுந் தோன்ருது" எனவும், அதனை நூல்வழி ஆராய்தல், "† நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைத்தல்" போலாமென்றும் இங்ஙனம் எண்ணற்ற வாக்கியங்கள், தமிழில் உள்ள மதநூல்களில் யாதேனும் ஒன்றைக் கற்றவர்க்கு எளிதில் தோன்றும். இப்பேரறிவால் விளையும் அனுபூதியும் இப்படியே அகோசரமாம். ஆதலால் இத்தன்மையான பேரறிவோ, இதுபோல மற்ற மதத்தர்கள் கூறும் தேவப்பிரசாத ஹேதுவான ஆன்ம நிலைமையோ உளதென ஒப்புக்கொள்ளும் ஆத்திகர்களுக்கன்றி மற்றவர்களுக்கு அந்த அந்த மதநூல்கள் பயன்படுவதில்லை. அதனுல், மதநூற்கிரமம் மற்ற நூற்கிரமம் போலன்று. அந்த அந்த மதத்தில் சிரத்தையுடைய ஆத்திகர்களுக்கு அவர்கள் அடையவிரும்பிய அனுபவ நிலை எய்துதற் கேற்றதான சாதனவிசேடங்களை, பரம்பரையாய்ப் பக்குவானுசாரமாகக் கூறி, அவைக்கேற்ற நடபடிகளை

* பாடுதுறை.

† தாயுமானவர்.

விதி விலக்குகளாக ஏற்படுத்துவதே மதநூல்களின் பொது வான இயல்பு.

ரு. இருவகைக் கரணமு மொருவழிப் படர்தல்
சிற்றறி வதுநூற் குச்சிறப் பென்ப.

'சிற்றறிவு' என்று முன் கூறிய இரண்டாவது அறிவானது, இப்பேரறிவுபோல் உளதோ இலதோ என ஒருவராலும் சந்தேகப்படக் கூடியதன்று. மனிதர்களாகிய நாம் புலன்களாலும் மனதாலும் நமது எதிர்ப்படுகின்ற பாஹியாந்தர விஷயங்களை ஒவ்வொரு கணமும் அறிகின்ற அறிவே, இவ்விடத்திற் சிற்றறிவெனக் கூறப்படுகின்றது. இவ்வறிவு, தான் பிறரெனும் விபாவனையுடையது. மனமுதலிய உட்கரணமும் கண் முதலிய வெளிக்கரணமும் ஒன்றுபட்டுப் பொருந்த, இவ்வறிவு விளங்குகின்றது. வெளிக் கரண உதவியாற் பெற்ற மனோ விகாரங்களை, பின் அவ்வெளிக் கரண உதவியின்றி அறிந்து விவகரிக்கக் கூடினும், ஆதிமுதல் வெளிக்கரண உதவியிலதேல் அகக்கரணம் தொழிற்படமாட்டா தென்பதே பொதுவான அபிப்பிராயம். ஆதலால் இச்சிற்றறிவிற்கு இருகரணத்தின் சம்பந்தமும் வேண்டுமெனக் கூறப்படுகின்றது. இவ்வித சிற்றறிவே நமக்கியல்பாயுளது ஆதலாலும், இச்சிற்றறிவினால் ஸ்தாபிக்கப்பட்டவைகள், தங்கள் தங்கள் அனுபவத்திற்கு உதவுவது மாத்திரம் அன்றி, அவற்றை மறுத்தார்க்குத் தெளிவினால் நிரூபிக்கத் தக்கனவா யிருப்பதாலும், இச்சிற்றறிவுதான் நூல்விவகாரங்களுக்கு உரித்தா யிருக்கின்றது. ஜீவபோதம் தற்போதம் கிஞ்சிஞ்ஞத்துவம் என்பதாகப் பலபெயர் இச்சிற்றறிவிற் கிருப்பினும், பேரறிவு புலனறிவு என்பவற்றைச் சுட்டாத இடங்களில் 'அறி'வென்னும் பெயரே இச்சிற்றறிவிற்கு உரித்தாகவும் போதுமானதாகவும் இருக்கும்.

சு. உண்மை பொதுமை யொழுங்கென மூன்று
திண்மைசேர் அறிவின் செறிவே பொதுநூல்.

பொதுவாய் மனிதர்களுக்கு எப்போதும் இயல்பாய் உள்ள சிற்றறிவினால் அறியப்படுகின்ற விஷயங்களைச் சம்பந்தப்பட்டது 'பொதுநூல்.' சிற்றறிவினை அறிவென உபசரித்தல் போலப் பொதுநூலையும் தலைமை நோக்கி 'நூல்' எனத் தனிப்படக் கூற

வும்படும். விஷயங்களை ஒவ்வொருவரும் ஆங்காங்கு ஒவ்வொரு கணமும் அறியும் கிரமத்தில் அவற்றை விவகரிக்கப் புகுந்தால் விவஸ்தை யற்றதாய் அன்ருே முடியும்! ஆதலால் நூலானது அவ்விஷயங்களை விவகரிக்கச் சில வரையறைவு செய்கின்றது. நூற்பாற்படும் அறிவு அழியாத 'உண்மையும்', விரிந்த 'பொது மையும்', ஏற்படுத்திய 'ஒழுங்கும்' என மூன்று இலக்கணம் உடையதாம். ஒன்றை அஃதுள்ளவாறுணர்தல் உண்மையான அறிவு. ஒன்றை மற்ெறொன்ருய் உணர்தல் உளதாதலால் அறிவை உண்மை உளதென்றும் இலதென்றும் பிரிக்க ஹேதுவானது. குற்றியைப் புருடனுக நேர்படப் புலன்களால் அறியும் பிராந்தி அறிவே அன்றி, மழை இயல்பாகவரும் சுபாவத்தை நினையாமல் அரசர்களுடைய கொடுமையால் வரவில்லையென்றும், நன்மையால் பெய்ததென்றும் எண்ணிக்கொள்கிறது: சவுக்கு மரம்போன்ற அனேக மரங்கள் புஷ்பதாதுக்கள் ஒரு மரத்திலும், கருக்கொளும் சிறு காய் வேெறொரு மரத்திலும் இயல்பாய் இருப்பதை உள்ளவாறுணராது, ஒரு மரம் தனித்து நின்று காயாத விஷயத்தில், ஜலக்குறைவு நிலக்குற்றம் முதலாக ஒரு காரணம் கற்பித்துக்கொள்கிறது: இப்படி ஒருவன் அறிவேன் என்று சொல்லும் அவன் அறிவுகளைச் சோதித்துப்பார்க்கில் எவ்வளவு விஷயங்கள் அவன் அறிந்தபடியல்லாதனவாய் முடியலாம்? நூல் அறிவு இப்படிப்பட்டதன்று. சனி என்னும் கிரகம் ஒரு இராசி விட்டு மற்ெறொரு இராசியில் விலகித் தோன்றுகிறதற்கு ஏறக்குறைய இரண்டரைவருடம் வேண்டும்: நாம் உள் உயிர்க்கும் வாயு இரத்தத்தைச் சுத்திபண்ணுகிறது: இதுபோன்ற நூல் அறிவுகள் எல்லாம் எவ்வளவு சோதித்தாலும் அழியாத மெய்மை யுடையனவாய் உள்ளதை உள்ளபடி விளக்குகின்றன. ஆனதினுல் நூலில் ஒப்புக்கொள்ளத்தக்க அறிவு திட்டமான பட்டாங்குடையதாகவே இருக்கவேண்டும். அப்படிப் பரீக்ஷைபண்ணித் திட்டப் படுத்துவதே நூலின் முதல் தொழில். உள்ளபடி ஒவ்வொரு விஷயங்களையும் அறிகிறதற்கு, அந்த அந்த நூல்கள் தத்தமக்கேற்ற கருவிகளும் சிறப்பு விதிகளும் உடையன வேனும், எல்லா நூல்களுக்கும் பொதுவாக உண்மை நிர்ணயிப்பதற்குப் பல நியமங்களும் உள. அந்நியமங்களில் வழுவுகின்றவைகள் நூலெனும் பெயர்க்கு உரியனவன்று. அந்நியமங்களை இவ்விடத்தில் யோசிக்கில் விரியும். தருக்கநூலின் முக்கிய விஷயங்கள் இந்நியமங்களே,

நூலறிவின் இரண்டாம் இலக்கணம் 'பொதுமை'. இதோர் என்முன் இருப்பது விளக்கு: நாளை சூரியன் உதிப்பான்: சாத்தன் நடந்திளைத்தான்: என்பவை உண்மையானவை யாயினும் நூலறிவன்று. தனித் தனி ஒவ்வொரு பொருளிற்கே உரித்தாய் அவற்றை உணர்ந்தார்க்கு அவைமாத்திரத்தால் பொதுவான இயல்பை விளக்கச் சத்தியற்று, தனிமை அறிவுகளாக நிற்கின்றன. சூரியன் கூ0 நாழிகையில் பூமியை ஒரு தரம் சுற்றி வருகிறதாகத் தோன்றுகிறான்: அசைவிடும் விலங்குகள் இருபிளப்பான குளம்பு உடையன: "உயிர்வரி னுக்குறண் மெய்விட்டோடும்": என்பது போல்வன ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு காலத்திற்கும் மாத்திரம் உரித்தாவன அன்றி, அந்த அந்தப் பொருள்களைஉள்ளிட்ட வகுப்பு முழுவதற்கும் காலம்மூன்றிற்கும் பொதுவாய், அவை அறிந்தோர்களுக்கு அவ்வவற்றின் விரிவிற்குத் தக்கபடி உலகியல்பை விளக்குகின்றன. இப்படி ஒன்றை அறிதலால் அதுபோலுள்ள மற்றனைத்தும் அறிந்தனவாகவும், சென்ற காலகதி அறிவதால் திரிகாலசம்பவங்களும் அறிந்தனவாகவும் முடியும் பொதுமையே, நூலறிவின் பெரும்பயன்களுக்குக் காரணமாகிய அதின் இரண்டாம் இலக்கணம். இப்பொதுமை தனிமைகளைச் சாமானியம் பரிச்சேதம் அல்லது விசேடம் என விவகரித்தலுண்டு.

நூலறிவின் மூன்றாவது இலக்கணம் 'ஒழுங்கு'. ஒரு சாதாரண மனிதன் தனக்குத் தெரிந்திருக்கிற உண்மையாயும் பொதுவாயுமுள்ள விஷயங்களை எடுத்துக் கூறுவானேயானால், பறவைகள் முட்டையிற் பிறப்பன: வெப்பம் ஏறின ஜலம் ஆவியாகும்: நக்ஷத்திரங்கள் சுயம் பிரகாசிகள்: இஞ்சிரசம் அஜீர்ணத்தை மாற்றும்: என்று இப்படி ஒன்றோடொன்று தொடர்ச்சியற்றதாய், ஒன்றை முன்னும் மற்றொன்றைப் பின்னும் சொல்லுவதற்கு நியாயமில்லாததாய்ச் சொல்லுகிறதாக இருக்கும். நூலோ அப்படி அன்று. அஃது தன்க்குள் அகப்பட்டவற்றைக் கிரமப்படுத்தி, தனது மூன்றாம் இலக்கணத்தை வெளியிடும். நன்னூல் என்னும் தமிழ்மொழி இலக்கணநூலேனும் பார்த்தவர்களுக்கு, இங்குக் கூறிய ஒழுங்கு யாதென நன்றாய்ப் புலப்படலாம். இவ்வாறு ஒழுங்கு படுத்துவதற்குள்ள விதிகள் அந்த அந்த நூலுக்குச் சிறப்பாகப் பலவாறுளவெனினும் பொதுவான சில விதிகளும் உண்டு,

எ. எடுத்த மொழிகட் கிலக்கணங் கூறல்
வெளிப்படை கூறிமே லல்லன விளக்கல்
கேவலங் கூறிமே லகேவலங் கிளத்த
லெல்லா நூற்கு மிவைபொது வொழுங்கே.

நூல் ஒழுங்கிற்குப் பொது விதிகள் மூன்றெனச் சுருக்கிச் சொல்லலாம். அவற்றுள் முதலாவது, நூலறிவைவிளக்க எடுத்துக் கொள்ளுகிற ஒவ்வொரு முக்கியமொழிகளும் இன்ன பொருளை மாத்திரம் உடையதென அதன் இலக்கணத்தை நிச்சயித்துக் கொண்டு அம்மொழிகளை அந்த அந்தப் பொருளிலன்றி மறு பொருளிற் புணர்த்தாதொழிதல். ஒரு சொல்லிற்கே பலபொருள் கள் உளவாதலால், அப்படியுள்ள சொற்களை இன்ன பொருளில்மாத்திரம் உபயோகப்படுத்துகிறதென்ற வரையறைவின்றி எதைப்பற்றியேனும் உண்மை ஆராயப்புகுதல், "கோடின்றி வட்டாடல்" போல் விவஸ்தையற்றதாயன்றே முடியும்! இதுவல் லாமலும் நூல் ஆராய்ச்சி பற்பல சங்கேத மொழிகளின்றி நடந் தேறவும் கூடியதன்று. அம்மொழிகளுக்குள்ள சங்கேதப் பொருள்கள் இன்ன இன்ன என எடுத்துக்கூறினல்லது வெளிப் படமாட்டா. நன்னூலில் இதுபற்றியே இயல்தோறும் 'எழுத்து' 'பதம்' 'புணர்ச்சி' 'உருபு' முதலிய ஒவ்வொன்றும் இன்னது இன்னதென்று குறிப்பித்துக் கிடந்தது. இப்படியே எல்லா நூல்களும் தத்தமக்குரிய சங்கேதமொழிகளை வரையறுத்தல் தவரு வழக்கம், அதனுல் நூல் ஒழுங்கின் இம் முதல்இலக்க ணம் எவ்வளவும் உபயோகமும் உஜிதமும் ஆமென்பதற்கு ஐயம் இல்லை.

அ. தானே விளங்குந் தனித்தா பிதமுங்
கற்போர்க் கெளிதா மிலகுதா பிதமுமென்
றிருகூ றுடையது வெளிப்படை யென்ப.

இரண்டாவது, ஒழுங்கிலக்கணம் வெளிப்படையை முன் வைத்தலும் அல்லாதனவற்றை முறையே பின்வைத்தலும் ஆம். 'வெளிப்படை' என்பது இரு கூற்றது. எடுத்த நூலில் அனுமா னுதிப் பிரமாணங்களால் மெய்ம்மை விளக்கி உறுதிப் படுத்தற்கு இடமும் ஆவசியமுமின்றி, ஆதிமுதல் ஒப்புக்கொண்டே அந்த

நூலின் விஷயங்களை விளக்கக்கூடியதா யுள்ளவற்றிற்கு, "ஒப்பு வெளிப்படை' அல்லது 'தனித்தாபிதம்' என சங்கேதப் பெயர் பெறும். ஒன்றை மற்றொன்றினாலேயே ஸ்தாபிக்கவேண்டியதா யிருப்பதனால், ஒரு நூலின்கண் எல்லாவற்றையும் ஸ்தாபித்தே அங்கீகரிக்கக் கூடுமாயின், பூமிக்குச் சேடன் ஆதாரமும் சேட னுக்குக் கூர்மம் ஆதாரமும் இப்படி ஆதாரம் ஒவ்வொன்றிற்கும் மற்றொரு ஆதாரம் தேடில் அனவஸ்தையாய் முடிவதுபோல் முடியுமாதலால், மேற்கூறியபடி அந்த அந்த நூல்விஷயத்திற்குப் பொருந்துமாறு இன்றியமையாத சிலவற்றைத் துவக்கத்தில் தானே அங்கீகரிக்க வேண்டியதுண்டு. அப்படி அங்கீகரிக்கப் பட்டவை இவை இவையென்று நூலாரம்பத்தில் விவரிப்பது உசிதமும் சான்றோர் வழக்கமும் ஆம்.

இஃதன்றி நூலில் பிரஸ்தாபிக்கப்படும் விஷயங்களிற் சில, கற்போர்க்கு எளிதாய் அறியத்தக்கனவாயும், அவை அறிந்தா லொழிய மற்ற விஷயங்கள் உண்மைப்படுத்தவும் உணரவும் கூடா தனவாயும் இருக்கில், அப்படிப்பட்ட 'இலகுதாபிதங்களும்' வெளிப்படையெனும் பெயர் பெறும். ஆனால் இரண்டாவதாகக் குறிப்பிட்ட வெளிப்படையானது, ஒரு விஷயத்தோடு மற் றொரு விஷயத்தை ஒப்பிடுங்கால் தோற்றுமேயன்றி தனித்தனி முன்கூறிய வெளிப்படைபோல் விளங்குவதன்று. புணர்ச்சி இலக்கணத்தோ டொப்பிடில் எழுத்திலக்கணம் வெளிப்படை யென் றல்லாமல், தனியே வெளிப்படையென்றுவது, அன்றென் றுவது கூறவொண்ணாததுவே போதுமான உதாரணமாக இருக் கும். இப்படி இருகூறான வெளிப்படையான விஷயங்களை முறை முறையே முன்நிறுத்தி விவசரிப்பது நூலொழுங்கின் இரண்டாம் இலக்கணம்.

### ௬. தனிப்படப் புண்பு சாற்றல்கே வலமே.

பொருள்கள் எல்லாம் பற்பல குணங்களை உடையன. நீர் என்றது குளிர்ச்சி நெகிழ்ச்சி கனம் நிறம் முதலிய பல குணங்க ளோடுகூடிய ஒரு பொருள். அப்படியே நெருப்பு வெம்மை ஒளி முதலிய பண்போடுகூடியது. இக்குணங்களில் ஒன்றும் குணியை விட்டுத் தனியே நிற்பது அன்று. குளிர்ச்சி வேண்டு மேயானால் மேற்கூறிய ஜலம் அல்லது அதுபோலுள்ள மற்றியா தாவது ஒரு குளிர்ந்த பொருளையன்றித் தனியே சம்பாதித்தல்

அசம்பவம். அப்படியே வெம்மையும் அக்கினியில் அபின்னமாக இருக்கின்றது. ஆனால் இவ்விதம் பிரிவற விளங்கும் ஒவ்வொரு குணத்தைக் குறித்துத் தனித்தனி விசாரிக்கவேண்டிய சங்கதிகள் பலவுமுண்டு. அப்படி விசாரிக்குங்கால் அந்த அந்தக் குணங்கள்மாத்திரம் தனித்தனியாய் மற்றக் குணங்களையும் அவையுடைத்தான குணிகளையும் விட்டு விலகி நிற்கின்றதாகப் பாவித்து விவகரிக்கப்படும். அப்படி பாவிக்கப்படும் குணத்திற்கும் குணத்தொகுதிக்கும் 'கேவல'மெனப் பெயர். ஆதலால் கேவலம் பசுத்தன்மையெனின், இயல்பாய்ப் பசுக்களுக்குள்ள நெட்டை குட்டை முதலிய உருவ விகாரங்களையும், வெண்மை கருமை முதலிய நிறவிகற்பங்களையும், இளமை முதுமை முதலிய பருவ வேறுபாடுகளையும் விட்டுவிட்டு, அவைகளுக்கு இன்றியமையாத குணங்கள் எவையென்று மதிக்கப்படுகின்றனவோ, அவைகளைமாத்திரம் தொகுத்து அவைகள் தனிப்பட நிற்கின்றனபோலப் பாவிக்கப்படுகின்ற பண்புத்தொகுதியாம். இத்தன்மையான கேவலகுணங்களைப்பற்றிய விவகாரங்களே நூற்களிற் பெரும்பான்மை. அதனால் நூல் பயில்வோர் கேவலத்தன்மையைச் சிந்தித்து நன்குணரவேண்டும்.

பொதுமைக்கும் கேவலத்தன்மைக்கும் பலவித சம்பந்தமுளதாகலின் ஒன்றை மற்றொன்றாய் மயங்குவது சகஜம். சற்றே கவனிக்கில் அவற்றின் வேற்றுமை வெளியாய் விளங்கும். அசைவிடும் விலங்குகள் பிளவுபட்ட குளம்புடையன என்பது பொதுவிஷயம். அசைவிடும் மிருகங்களாகிய ஆடு மாடு எருமை மான் முதலிய வகுப்புக்கள் ஒவ்வொன்றிற்கும் மேற்சொல்லிய குணம் பொருந்தும். அஃதன்றி ஒரு வகுப்பே எடுப்பினும் அந்த வகுப்பில் உட்பட்ட ஒவ்வொரு ஆட்டிற்கும் மாட்டிற்கும் பொருத்தம் உடையதாம். இதுவே முற்கூறியபடி பொதுமையின் இலக்கணம். வெம்மையானது அது நிற்கும் இடத்திலிருந்து ஒரே கிரமப்படி எத்திசையிலும் தாரையாய்ப் பரவும் என்பது கேவல ஒரு குணவிஷயம். வெம்மை தனித்து நிற்கில் மேற்கூறியபடி பரவுமேயன்றி, இயல்பாய் வெவ்வேறு குணங்களோடு ஆங்காங்குக் கலந்து நிற்பதினால் அந்த அந்தக் குணங்களுடைய சம்பந்தத்தால் ஒரு திசை பரவியும் ஒரு திசை பரவாமலும் இருப்பதைத்தான் நாம் புலனால் அறியக்கூடியதாக முடிகிறது. ஆயினும் அனுமானாதிகளால் தனித்து நிற்பின் முற்

கூறியபடி எங்கும் பரவுமென்பது துணியக்கூடியதாகவும் இருக்கிறது. இவ்விதம் ஒவ்வொரு குணங்களோ, ஒவ்வொரு குணத்தொகுதிகளோ, தனித்தனி அன்னிய குணங்கள் கலவாது நின்றால் எப்படியோ அப்படிப்போல பாவனை பண்ணுவதே 'கேவலம்'. இதுவே பொதுமைக்கும் கேவலத்திற்கும் உள்ள தலைமையான வேறுபாடு. இது 'அகேவலம்' என்பதை விசாரிக்கும்போது மேலும் விசேடமாய் விளங்கலாம்.

## கO. பண்பார் பிண்டம் அகேவல மென்ப.

கேவலம் அல்லாதது 'அகேவலம்'. கேவலம் என்பது ஒரு பொருளின் அனேக குணங்களில் ஏதாவது ஒரு குணத்தையோ அல்லது சில குணத்தொகுதியையோ இசைந்தபடி எடுத்துப் பிரித்து, தனிமையாய் நிற்கிறதாகப் பாராட்டிப் பாவனை பண்ணுவதாகக் கூறப்பட்டது. 'அகேவலம்' என்பது அப்படியல்லாமல் ஒரு பொருளுக்குள்ள சகல குணங்களும் ஒன்றுபட்டு அப்பொருளில் இயல்பாய் நிற்கின்ற கிரமப்படியே அங்கீகரித்து அப்பொருளை விவகரித்தற்குப் பெயராகும். பொதுவான பல குணங்கள் ஒன்றுபடக் கலந்து குணியுடன் கூடி ஆங்காங்கு உடலாகிய பிண்டம்போல, வெவ்வேறு பொருள்களாய் நிற்கிற இயல்பின்படி விவகரிப்பதனால் இதனைப் 'பிண்டவிவகாரம்' என்றும் கூறப்படும். 'கேவலம்' ஆங்காங்குத் தோன்றும் பிண்டத்தை அங்கிகரியாது, அவற்றுள் பொதுவாய் நிற்கும் ஒரு குணத்தை மாத்திரம் பாவனை பண்ணுவதினால் அதற்கு 'அபிண்டம்', 'அமூர்த்தம்' எனவும் கூறலாம். 'ஜாதி' யென்னும் நியாயசங்கேதம் ஒற்றுமையுடையதேனும் தென்மொழியில் பொருந்துவதன்று.

இப்படிச் சொல்லப்பட்ட கேவலகுண விவகாரங்களும் பிண்டபதார்த்த விவகாரங்களும் ஆகிய இரண்டும் நூல்களில் உள. அவற்றுள் அமூர்த்தமாகிய பண்பாராய்ச்சிகளை முன்னும், பிண்டமாகிய பொருளாராய்ச்சிகளைப் பின்னும் வைத்து முடித்தல் நூலொழுங்கின் மூன்றாவது இலக்கணமாம். இப்படிச் செய்வதின் காரணம் வெளியரங்கமாய் விளங்கும். தனித்தனி ஒவ்வொரு பண்பின் ஞானமின்றி அப்பண்புகள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒன்றோடொன்று ஒற்றுமைப்பட்டும் முரணியும் கலந்தும் உண்டாகும் ஒரு பொருளின் மொத்தத் தன்மை அறியற்பாற்றதன்றே. ஒவ்வொரு மருந்தினங்களின் தனிக்குணம்

அறியாத வைத்தியன், பல மருந்திரசம் சேர்ந்த ஒரு கஷாயத்தின் பிரயோஜன விசேஷத்தை எப்படி அறிவான்?

ஆனதினல் ஒழுங்கான நூல்விவகாரம்—(க-வது) அவ்விவகாரத்தில் நேரத்தக்க மொழிகளையும் அம்மொழிகளால் குறிக்கப்படும் பொருள்களையும் இலக்கணவகையால் நிர்ணயிப்பதும்; (உ-வது) அந்த விவகாரத்திற்குட்படாததாயும் அந்தவிவகாரம் நன்கு முடிதற்கு அவசியம் ஒப்பத்தக்கதாயும் உள்ள நிர்வாதமாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்ற தனித்தாபிதங்கள் இவை இவை என்று விவரணம் பண்ணி நூலாரம்பத்தில்தானே எடுத்துக்காட்டுவதோடு, விவகரிக்க எடுத்துக்கொண்ட விஷயங்களில் சுலபமாய் அறியத்தக்கவைகளையும், எவை புலப்படாமல் ஒழிந்தவை ஸ்தாபிக்கவும் புலப்படுத்தவும் ஒண்ணுவோ அவைகளையும் தெரிந்தெடுத்து முறைமுறையே ஆற்றெழுக்கும் சங்கிலித்தொடர்பும் போலக் கோர்வையாய்க் கூறுவதும்; (ந-வது) அப்படியே அந்த விவகாரத்தில் தனிக்குணவிபாவனையால் சாத்தியமாவதையும் சகலபண்பும் கலந்த பிண்ட சுபாவத்தால் சித்தாந்தப்படுவதையும் உய்த்துணர்ந்து பிரித்து முன்னது முன்னும் பின்னது பின்னும் ஆக எடுத்து விளக்குவதும் ஆகிய இந்த மூன்றுறுப்பமைந்த ஒழுக்கம் என்னும் மூன்ருவது இலக்கணத்தையும் உடையதாம்.

## கக. முதல்வழி சார்பென மூவகை பொதுநூல்.

இக்கூறிய மூவகை இலக்கணங்களும் உள்ளவற்றிற்கே பொதுநூல் எனும்பெயர் அமைவதானல், நூல் நூல் என வழங்கும் அநேக புஸ்தகங்கள் இவ்வகுப்பினின்றும் விலக்கப்படும். முதலாவதிலக்கணமாகிய திட்டப் படுத்திய மெய்மையை உடையதெனக் கூறத்தகாதவைகளாகப் பல நூற்போலிகள் பொதுநூலாக எங்நாட்டிலும் நடிப்பதுண்டு. பறவைகளின் கதி கூக்குரல் இவற்ருலும், பல்லியின் இருப்பிடம் ஓசை யாதியாலும் மனிதருக்கு நேரிடுகின்ற நன்மை தீமைகளை நிச்சயப்படுத்துவதான பக்ஷிநூல், பல்லிநூல் முதலியவற்றின் விதிகள் எவ்விதம் உண்மைப்படுத்தப்பட்டவையென்பது விளங்குமட்டும், அவற்றை நூற்போலிகளாக மதிப்பவரே பெரும்பான்மையராய் இருக்கலாம். இந்நூல்களை நிராகரிப்பதன்று இவ்விடத்தில் பிரஸ்தாபித்ததின் கருத்து. அக்ஷரமே தெரியாத சிலர் சாஸ்திரியென்ற

பெயர் வகிப்பதுபோல நூலிலக்கணம் அமையாதவை வழக்கத்தில் நூலென நடிப்பது உண்டெனவும், நூல் இனங்களை வகுக்கப்புகுவோர் அவைகளை ஒழித்து உண்மையான நூல்களைக் கவனித்தல் உசிதமெனவும் கூறுதல் மாத்திரமே ஆவசியம். ஆதலால் நூலுக்குரிய முதலிலக்கணம் பூரணமாய் அமைந்த நூல்களைப் பிரித்தெடுத்துப் பொதுமை ஒழுங்கு என்னும் மற்ற இலக்கணங்களும் அமைந்திருக்கிற அளவின் கிரமத்தைப் படிப்படியாய் நோக்கி அந்நூல்களை வகுப்பதே சாத்தியமும் உசிதமும் ஆம். இப்படி யோசிக்கும்போது, பொதுநூல் 'முதனூல்' 'வழிநூல்' 'சார்புநூல்' என மூன்று வகுப்புடையதாக விளங்கும்.

கஉ. முதனூ லான்ற முடிவுடன் மொழிந்த
இலக்கண நிரம்பத் துலக்கிடு மென்ப.

நூலிலக்கணத்துள் 'உண்மை' என்பது, கூடுதல் குறைவென்ன இடமின்றி உண்மைபொய்மை என இரு பிரிவிற்கே இடந்தரும். உண்மை சற்றேனும் குறைவுபடில் அது பொய்மையாகவே முடியும். ஆதலால் இவ்விலக்கணம் நூலெனத் தலைப்படும் எல்லாவற்றிற்கும் பூரணமாக இருந்தே தீரும். 'பொதுமை' என்னும் இரண்டாம் இலக்கணம் இப்படியன்று. இஃது அதிலும் அதிக பதார்த்தங்களுக்குப் பொருத்தமுடையது; அதிலும் இஃது எண்ணத்தில் குறைவான விஷயங்களுக்கே பொருந்தும்: என்று இப்படிப் பொதுமையானது விரிவிற் குறைவு கூடுதல் அடையலாம். மூன்றும் இலக்கணமாகிய ஒழுங்கு மற்றொரு விதத்தில் பேதகதி அடையத்தக்கது. நாம் நூலால் அடைய விரும்புகிற கருத்திற்கிசைய அது பேதப்படுவதுண்டு. அறிவின் விருத்தியையும் அதினால் வரும் வித்தியானந்தத்தையு மாத்திரமின்றி, யாதேனும் ஓர் இதரகாரிய சாத்தியத்திற்காக நூல் எழுதப்படின், அக்காரிய நோக்கத்திற் கிசைய போதப்படுத்தும் விஷயங்கள் ஒழுங்குபடுத்தப்படும். நூலின் முதற்கருத்து மெய்மை விளக்குவதாதலால் எடுத்துக்கொண்ட விஷயத்தின் உண்மையை இருக்கிறபடி நிஷ்காமியமாய் அதனால் விளையும் பிரயோஜனத்தை நோக்காது கூறுமிடத்தே முன் விவரித்த ஒழுங்கிலக்கணம் பூரணமாக விளங்கும். இக்காரணங்களை ஆராய்ந்து, எடுத்துக்கொண்ட விஷயம் பொதுமையில் எவ்வளவும் விரிந்தும், நிர்ணயிக்கப்படும் விதிகள் ஏகதேசமாயன்றி எங்

கும் அபாத்தியமாய்ப் பொருந்தத் தக்கதாயும், முடிந்த முடிவுகள் ஊற்று நோக்குந்தோறும் எடுத்தவிஷயங்கள் மாத்திரம் அன்றி இதர விஷயங்களையும் விளக்கும் நுண்மையான ஆழ்ந்த கருத்தை உடையதாயும், உண்மையை அறிந்து வெளிப்படுத்த வேண்டுமென்ற ஏக கருத்தினையும், அதற்கேற்றதாய் விவரிக்கப் பட்ட ஒழுங்கினையும் பூர்த்தியாய் விளக்கியும் நிற்கின்ற நூல்களைக் குறிப்பிட்டு எடுக்கில், தலைமைபற்றி அவைகளுக்கு முதனூல்கள் எனப் பெயர் கூறத்தகும்.

கசு. இலங்கிடு மிருக்கையு மெண்ணுடைளவு
மிருவகை யியக்கமு மைக்கிய முயக்கமு
முயிரு முளனுமென் றறுவகை முதனூல்.

தோற்றுகின்ற எல்லாப்பொருளுக்கும் பொதுவாய் நிற்கின்ற குணம் யாதெனப் பார்ப்போமாயின், கேவலம் 'இருக்கை' அல்லது 'தோற்றல்' என்னும் குணத்தைவிடத் தனிப் பண்பாக ஒன்று கூறுதற்கில்லை. 'இருக்கை' எனும் குணம் இல்லாததற்குப் பொருள் என்னும் பெயரே இலது. மலடிமைந்தன் ஒருகாலமும் ஒரு பொருளாக விவரிக்க உதவான். வாக்கு மாத்திரமாய்ப் பேசுதற்குக் கூடுமே ஒழிய, முயற் கொம்பு, ஆகாயத் தாமரை முதலிய இல்லாதவைகள் பொருளெனப் படுவதில்லை. ஆதலால் பொருளெனத் தோற்றுமேயாகில், கேவலம் இருக்கை என்னும் குணம் அதனுடன் இருக்கவே வேண்டும். இக்குணத்தை வடமொழியார் கேவலம் சன்மாத்திரமென்றும், கேவலசத்தென்றும், வஸ்துத்தன்மை யென்றும், அஸ்தித்துவ மென்றும் பல மொழியால் விவகரிப்பர். இந்த இருக்குகை என்பதே வேருெரு பாவனையில் தோற்றுகை என்னும் பெயர் பெறும். தோற்ருதொழியில் இருக்குகையின்று. தோற்றுவதே ஒரு பொருளின் 'இருக்கை'. இப்படியாகத் தோற்றும் தன்மை முற்கூறிய இருக்கையோடு அபின்னமாயிருந்து, பாவனுபேத மாத்திரத்தால் பேதப்படுவதினுல், கேவலம் 'இருக்கைக்கு' எவ்வளவு பொதுத் தன்மை உளதோ அவ்வளவு பொதுத்தன்மை 'தோற்றுகைக்கும்' உண்டு. இத்தோற்றுகைக்கு வடநூலார் கேவலசின்மாத்திரமென்றும், சித்தென்றும், பாதித்துவம் என்றும் பேர்கூறுவர். சத்து சித்தென்னும் இவ்விருக்குகை விளங்குகை என்பது

இரண்டு குணமெனக்கூட விவகரிக்கிறதற்கில்லாது ஐக்கியப்பட்டு நிற்கின்றபடியால் அவற்றை விவகரிக்கின்ற நூல் ஒன்றாகவே இருக்கின்றது.

## கச. இருக்குகை விளக்குநூல் தத்துவ மென்ப.

கேவல சத்சித் விவகாரங்களைச் செய்கின்ற நூலுக்குத் 'தத்துவநூல்' எனப் பெயர். 'தத்துவம்' என்றால் 'அதுத்தன்மை' என்னும் இயற்பொருளை உடைத்தாய் இருக்குகை விளங்குகை என்னும் இரண்டையும் உணர்த்தும். இது முதனூல்களில் முதனூல் என்னுந் தலைமை அடைவதற்குரிய (க-வது) காரணம், அது விவகரிக்கின்ற விஷயத்தைவிட விரிவிலோ கேவலகுண விபாவனையிலோ வேறுவிஷயம் இல்லாமையேயாம். அன்றியும், மற்றெல்லா நூல்களும் இந்நூலினின்று சிற்சில தத்துவ நிர்ணயங்களைத் தனித்தாபிதங்களாக எடுத்துக்கொள்ளவேண்டியதாயும், இந்நூல் அப்படி மற்றநூல்களை அபேக்ஷியாமல் நிற்கக்கூடியதாயும் இருத்தலே (உ-வது) காரணம். ஜகதாதாரவஸ்துவைப் பிரதிபாதிக்கின்ற மதநூல்களோடு இந்நூல் மிகவும் ஒற்றுமைப்படுவது (ங-வது) காரணமாக எண்ணப்படும். ஊகத்தின் அனுப்ரவேசத்திற்கு இடங்கொடுக்கிற மதநூல்கள் எல்லாம் இத்தத்துவநூலைக் கூடிய அளவும் தழுவியே நிற்கின்றன. நம் சதுர்வேதங்களும் அவற்றை ஒட்டி வரும் சமயங்களும், இந்தத் தத்துவ நூலோடு கலந்து அபேதமாய் நிற்கின்றனவென்று அவற்றை அவிரோதமாய்ச் சோதனை செய்தவர்கள் யாவரும் துணிகின்றார்கள். அப்படி வைதீகமதக்கொள்கையோடு அபேதமாய்க் கலப்புண்ட தத்துவநூலுக்கு உத்தரமீமாம்சம், வேதாந்தம் எனும் பெயர் சாதாரணமாய் வழங்குகின்றது. இந்நூலில் நம் முன்னோர் மிகவும் தேர்ச்சியடைந்தோர் என்பது, இந்நூலொடு கலப்புண்டிருக்கின்ற மதக்கொள்கைகளை முற்றிலும் மறுப்போர்க்கும் சம்மதம். மற்ற தேசவாசிகள் இதுகாறும் ஆய்ந்து அடைந்திருக்கும் துணிவுகளைப் பன்னூற்றாண்டுக்குமுன் இவர்கள் உழைத்தறிந்த முடிபுகளோடு ஒப்பிடுங்கால் ஐயமற நம் முன்னோரின் மதிநுட்பமும் அக முக விலாசமும் புலப்படும். அப்படி இயன்ற அளவேனும் நோக்குவதற்கு இது சந்தர்ப்பம் அன்று.

கரு. எண்ணே டளவுநூல் கணித மென்ப.

'இருக்குகை' அல்லது 'விளங்குகை' என்னும் குணம் நீக்கிடில், பொருள் எனப்படும் எல்லாவற்றிற்கும் பொதுவாகநிற்கும் குணம், ஒன்றிரண்டு என எண்ணப்படும் பண்பேயாம். நம்மால் நினைக்கக்கூடிய பதார்த்தங்கள் யாவும் 'எண்ணம்' என்னும் பரிமாணம் உடையனவே. நக்ஷத்திரம்-உஎ: மேகம்-எ: மலை-அ: மரம்-ரு: பசு-சு: கிளி-ந: நாற்காலி-உ: என இப்படிப் புலப்படும் பொருள்கள் எல்லாம் கணக்கிடக் கூடியனவாம். அப்படிப் புலப்படாத மனோவிகாரங்களா யுள்ளவைகளும், "நான் இரண்டு தரம் நினைத்தேன்: நாலுதரம் கோபித்தேன்" என்பதாக எண்ணத்திற்குட்படாதொழியா. முன் பின் என்னும் கால வேற்றுமையே எண்ணுகைக்கேது என்பது தத்துவநூலோர் துணிபு. அதனை இவ்விடத்திற் குறிப்பிப்ப தொழிய விவகரிக்க ஆவசியமில்லை. காலத்துள் அகப்படாத தோற்றம் இல்லாததினுல் எண்ணுகைக்குட்படாத பொருள்களும் இல. இக்கால தத்துவத்தைத் தனித்தாபிதமாக அங்கீகரித்துக்கொண்டு 'எண்' என்னுங் குணத்தை அமூர்த்தமாக விவகரிக்கின்ற நூல் முற்கூறிய தத்துவ சாஸ்திரத்திற்குப் பிற்பட்ட முதனூலாக இருக்கின்றது. 'எண்' என்னும் குணம் எப்படி 'இருக்குகை' என்பதற்குப் பொதுமையில் தாழ்ந்ததாக இருக்கின்றதோ, அப்படியே இந்நூலும் தத்துவநாற்கு விரிவிற் குறைந்ததாக இருக்கும். ஆனுல் இவ்வொன்றுமொழிய மற்ற எல்லா நூற்கும் விரிவிலும் கேவல விபாவனையிலும் இது மிக்கதே.

'எண்' எனும் குணம் நீங்கில் மற்றெக்குணம் பொருள் எல்லாவற்றிற்கும் பொருத்தமென மேல் ஆராயில், நீளம் அகலம் கனம் என்னும் விகாரங்களையுடைய 'அளவு' அடுத்த குணமாக விளங்கும். 'விஸ்தாரம்' 'விததி' 'வியாப்தி' 'திக்கு' 'தேசம்' என்னும் வடமொழிகள் இக்குணத்தையே குறிக்கின்றன. 'எண்' என்பது எப்படி காலதத்துவத்தின் விகற்பமோ அப்படியே 'அளவு' தேசதத்துவத்தின் விகற்பமெனத் தத்துவ ஞானிகள் கூறுவர். ஆகாயமென்னும் ஒரு பூதமாக இதனை விவகரிப்பதும் உண்டு. தேசம் ஆகாசம் என்று சொல்லுகிறது, தமிழில் இடம் என்னும் பொருளுடையதேயன்றி வேறன்று. எப்பொருள்களும் இடமில்லையானுல் இருக்கையுமில்லை. இடத்தை

நிரப்பும் குணமே இவ்விடத்தில் 'அளவு' எனக் கூறியது. 'இக்கட்டில் (க0) அடி நீளம்' என்னில் அது (க0) அடியுள்ள இடத்தை நிரப்புகிறதென்றே அதன் பொருள். இப்படி எவ்வளவு சிறுமையாயிருக்கினும், புலப்படும் பதார்த்தங்கள் யாவும் இடத்தை நிரப்பாம லிருப்பனவல்ல. அணுவென்று சொல்லும் நுண்ணிய பொருளும் இடம் நிரப்புவதினாலேயே உளதாம். பெரிதும் சிறிதுமாகிய சகல பொருள்களும் இவ்விதம் 'அளவு' எனும் குணத்தோடு கூடியனவாகவே இருக்கின்றன.

ஆயினும் 'எண்' எனும் கணக்கிடக்கூடிய தன்மைபோல 'அளவு' எனும் குணம் விரிவுடையதன்று, ஏனெனில், மனோ விகற்பங்களுக்கு நீளம் அகலம் கனம் என்ற வேற்றுமை இல்லை. கோபமானது பெரிது சிறிது என விவகரிக்கக் கூடியதாயினும், இப்பெருமை சிறுமை இடம்நிரப்பும் குணத்தால் வந்தனவன்று. கோபத்தின் நீளம் வீதி என்று பேசுவது பொருளில்மொழி யன்றோ! இப்படியே உயிர் மனம் சித்தம் என்பதியாவும், இடம் நிறைக்கும் அளவென்னும் குணம் இல்லாதனவாம். இக்குணத்தி னாலேயே, தத்துவநூலோர் சகலபொருள்களையும் பஹிர்விஷயம் ஆந்தரவிஷயம் அல்லது வெளிப்பொருள் உட்பொருள் எனப் பிரித்து, முன்னதற்கு அளவெனும் தேசவிகற்பமே இலக்கணமாக வும், பின்னதற்கு அக்குணத்தின் அபாவமே இலக்கணமாகவும் நிரூபிக்கின்றனர். மனாதி தத்துவங்களாகிய உட்பொருள்களுக்கு இடம் நிறைக்கும் தன்மையாகிய அளவென்னும் குணம் இல்லை என்பது நன்றாய்க் கவனிக்கத்தக்கதான ஒரு சங்கதி. இதனை மறப்பது அனேக மயக்கத்திற்கு ஹேதுவாக முடியும். இம் மறதியாலன்றோ மறு ஜனன வாதத்தில் ஜீவன் ஓர் உடலை விட்டு மற்றோர் உடலில் எவ்வழியாய்ப் போகின்றானென்று சந்தேகிக்கின்றார்கள்! மோக்ஷம் என்கிற ஆன்மவிவகாரத்தை ஓர் இடமாக விபரீதபாவனை பண்ணுகின்றதற்கும் இம்மறப்பே காரணம். மனது சிரசிலிருக்கின்றது, மூக்கு நுனியிலிருக்கின் றது என்பதாக மயக்கவாதம் செய்வதும் அதனாலேயே. இப்படி அநேக சந்தேக விபரீதங்களுக்கு நிவர்த்தி, இந்த அளவென்னுங் குணம் ஜீவாதி ஆந்தர விஷயங்களுக்குப் பொருந்தாது என்னும் துணிபே. அதனால் 'எண்' என்னும் குணம்போல இவ்வள வென்னும் குணம் பொதுமை உடையதன்றென்பதும், அதனால் முன்னதை விசாரிக்கும் நூலில் அளவை விசாரிக்கும் நூல்

விரிவிற் குறைவுடையதென்பதும் வெளியாம். அளவை விசாரிக்கும் நூற்கு அளவுநூல் தச்சுநூல் ஜியாமிதி பூமிதி க்ஷேத்திர கணிதம் என்னும் பல பெயர் பொருந்தும். இந்நூல் எண்ணெனும் குணத்தை ஆராய்கின்ற நூலுக்குரிய காலதத்துவம் மற்றும் தனித்தாபிதங்கள் இவைகளோடு, தேசதத்துவத்தையும் "இரு நேர் இரேகைகள் இடம் அடையா" என்பதாதியான சில விசேட தனித்தாபிதங்களையும் உடையதாய் முறையே நீளம், நீளம் அகலம், நீளம் அகலம் கனம் என்னும் மூன்று விகாரப்பாடுடைய அளவினுல் ஆக்கப்பட்ட சகல வடிவங்களுடைய தன்மைகளை ஆராய்ந்து துணியும். இது தனிப்பட ஒரு முதனூலாய் இருப்பதற்குப் போதுமான விரிவும் மேன்மையும் உடையதேனும், இதன் சூக்ஷ்ம விவரணங்களுக்குக் கணக்கிடுதற்கேற்ற ஒன்று இரண்டு மூன்று என்னும் விபாக விசேடங்கள் முற்றிலும் தேவையாயும், பெரும்பான்மையும் இரண்டு நூல்களுக்கும் சிறப்பிலக்கணங்களும் ஆராய்ச்சிவழிகளும் பொதுவாயும் இருப்பதினுல், நூல் வல்லோர் இரண்டையும் சேர்த்து ஒரு நூலாகவே விவகரிப்பதும், அந்நூலுக்குக் 'கணிதம்' எனப் பெயர் கூறுதலும் வழக்கம். தற்காலத்தில் கணிதம் என்ருல் வானில் தோன்றும் சந்திர சூரியர் முதலிய கிரகங்களின் கதிகளைக் கணக்கிடும் நூலுக்கே உரித்தான பெயர் என எண்ணுவதுண்டு. இக்கோள்களின் போக்குவரவை நிர்ணயம் பண்ணுவதற்கு விசேடமாய் உபயோகப்பட்டுவருகின்றமையால், இப்படி நினைக்கிறதற்கு இடமானதேயொழிய, வானில் தோன்றும் கோள் முதலிய ஜோதிகளை ஆராய்கின்ற ஜோதிட நூலுக்குக் கணிதமென்பது பிரதிபதமன்று. ஜோதிட நூலைவிட இக்கணிதநூல் பொதுமையிலும் கேவலத்திலும் அதனுல் விரிவிலும் மிகவும் பெரிது. அங்கசணிதம்; பீஜகணிதம்; திரிகோணுதி சமக்ஷேத்திரகணிதம்; கோளகணிதம் என்றிப்படியுள்ள இதின் அநேக உட்பிரிவுகளில் ஒவ்வொன்றே ஜோதிடத்திலும் அதிக அருமையான விரிவுடையதாகும். தேசகாலமென்னும் இரண்டு தத்துவங்களையும் சில தனித்தாபிதங்களையும் இதற்கு முன்னூலாகிய தத்துவநூலினின்றும் பெற்றுக்கொண்டு, கணக்கிடவும் சிறிது பெரிது என ஒப்பிடவும் கூடிய சகல விஷயங்களையும் ஆராயும் இக்கணிதநூல் முற்கூறிய தத்துவநூலொன்றிற்கே குறைவுடையதன்றி மற்றெல்லா நூல்களிலும் விரிவில் மேற்பட்டது. இந்நூலும் நம்

முன்னோரால் பயிற்சி செய்யப்பட்டதுதான் எனினும், பற்பல விவரணங்கள் அந்நிய தேசவாசிகளின் முகமாய் அறிய வேண்டியவையாயுள வென்பதே இருமையும் அறிந்தோர் கருத்து. தத்துவ நூல்போல முழுதும் புத்திமாத்திர சாத்தியம் அல்லாவிடினும் பெரும்பாலும் அத்தன்மையதாயும், கருவிப் பிரயோகமும் அனுபவ விருத்தியும் விசேடமாய் அபேக்ஷியாததாயும் இருக்கின்றபடியால் தத்துவநூல் கணிதநூல் இரண்டையும் சேர்த்துக் 'கேவலநூல்' என்று கூறுவது முண்டு. இவற்றிற்கே முன்னோர் கூறிய 'வித்தை' என்னும் பெயர் விசேடமாய் அமையும்.

கசு. இயக்க மென்ப திடப்பெயர் வஃதுஞ்
சாங்க மணுவென வீங்கிரு பாற்றே.

இருக்குகையோடு கூடிய விளங்குகை, கணக்கிடும் கூறுபாடுகள் அடங்கிய அளக்கும்படியான வடிவ பேதங்கள் ஆகிய இவ்விரு குணங்களையும் நீக்கிடில், 'இயக்கமென்பது' பொருள்களுக்கு அடுத்த பொதுவான குணமாக விளங்கும். ஓர் இடம் விட்டு மற்றோர் இடத்தில் பெயரும் தன்மையே 'இயக்கம்'. அசைவு சலனம் என்பவைகள் இதற்கு மறுபெயர்கள். புலன்களுக்குப் புலப்படும் வெளிப்பொருள்கள் யாவும் இக்குணமுடையனவே. சந்திரன் சூரியன் முதலான வான்பொருள்களும், யானை குதிரை முதலிய விலங்கினங்களும், குடை கத்தி முதலிய செய்பொருள்களும் ஆகிய 'இதம் விருத்தியில்' அகப்பட்ட வெளிப்பொருள்கள் யாவும் சலிக்கின்றவையும் சலிக்கக் கூடியவையுமேயாம். மனுதி தத்துவங்களுக்கு இடம் என்னும் பிரதீதியே இல்லாததினல் இடப் பெயர்ச்சியென்னும் இயக்கம் இல்லை என்று சொல்லாதே போதரும். மனம் சலிக்கின்றது என்று சொல்லுவது, அதனது கலக்கத்தை உருவக அணியாய் அலங்கரித்துக் கூறுவதொழிய வாஸ்தவமன்று. அதினல் இக்குணம் இருக்குகை விளங்குகை கணக்கிடுகையாகிய இம் மூன்று குணங்களில் பொதுமையில் தாழ்வுடையது. அளவிடுவதற் கேற்ற விஸ்தீரணம்போல வெளிப்பொருள்களுக்கெல்லாம் பொருத்தம் உடையதினல் இயக்கமும் அதுபோன்ற பொதுமை உடையதென மதிப்பாருமுளர். ஆயினும் ஆகாசம் என்பதாக ஒரு பதார்த்தத்தை ஒப்புவோர் இதனை அங்கீகரியார். ஆகாயமென்பது ஒவ்வொரு பாகமாகப் பிரித்து அளவிடக்கூடியதென்றும், ஆனல்

அஃது எங்கும் நிறைவுடைய பூரண பதார்த்தமாவதினுல் இடப் பெயர்ச்சியாகிய இயக்கம் எனும் குணம் அடையாதென்றும், ஆனதினுல் அளவிற்கு இயக்கம் பொதுமையிற் குறைவுடைய தென்றும் துணிபவரே பெரும்பான்மையர். இதன் உண்மை எப்படி ஆயினும் ஆகுக. எண்ணுகை அளவு எனும் இரண்டை யும் விசாரிக்கும் கணித நூற்கு இயக்கநூல் பொதுமையில் பின் னிட்டதென்பது சர்வசம்மதம்.

இந்நூலில் விவகரிக்கப்படும் இயக்கம் இரண்டு பெரும்பிரி வுடையது. ஒரு பொருள் ஓர் இடம்விட்டு மற்ருேர் இடத்தில் பெயரும்போது பிண்டாகாரமாய்த் தனது அங்கம் முழுவதும் பெயர்ச்சி அடைகின்றது, பிரத்தியக்ஷமான இயக்கம். ஒரு கல்லே ஓர் இடத்திலிருந்து மற்ருேரிடம் அகற்றுவோமே யாஞல், அந்தக் கல்லின் அங்கம் யாவும் இடப்பெயர்ச்சி அடை கின்றதல்லவோ? இப்படி உள்ள இயக்கத்தையே நாம் பொது வாக சலனம், அசைவு என்று பேசுகிருேம். இதற்கு 'சாங்க இயக்கம்' என்று இவ்விடத்திற் பெயர்கூறிப் பிரிக்கவேண்டிய காரணம் கீழ் வருவனவற்ருல் விளங்கும்.

### கஎ. சாங்கஞ் சாமிய மசாமிய மெனவிரு
### பாங்கா நிலநீர் கால்சே ராவழி.

மேற்கூறிய சாங்க இயக்கத்தை ஆராய்ந்து நிர்ணயிக்கப்படு கின்ற விதிகள் இரு கூற்றனவாம். ஒரு நிறைகோலில் இரு புறமும் வைக்கப்படும் பொருள்கள், சமான பாரத்தோடு தூங் கும்போது அவை அசைவற்று நிச்சலமாய் நிற்கக் காணுகிருேம். இப்படி நிற்கும்போது இயக்கமில்லாததாகவன்ருே தோன்றும்? உண்மையில் இப்படி அசைவற நிற்றலும், நிறைகோலின் இரு புறமும் கீழ்நோக்கித் தூங்கும் பொருள்கள் ஒரே கிரமமாய்த் தங்கள் இயக்க சத்தியைச் செலுத்துவதினுல் நேரிட்டதென்பது சற்றே கவனிக்கில் வெளியாம். சமான பலத்தோடு எதிர்த்து இரு புருடர் மல்யுத்தம் செய்யும்போது, அவர்கள் இருவரும் அசைவின்றிக் காணப்படினும் யதார்த்தத்தில் தங்கள் வலிமை யைச் செலுத்தாது வாளா ஒருவரை ஒருவர் தொட்டு நிற்பவர் கள்போல் ஆகார். இருதலே இயக்கமும் சமானமாக எதிர்த்து நிற்றலால் அசைவின்மைபோல் தோற்றுகிறதேயொழிய இயக் கம் அவ்விடத்தில் இல்லாததன்று. ஒரு பொருளே நேர்பட விப

ரீத திசைகளில் இரு சமான புருடர் இழுக்கும்போதும் இப்படியே இயக்க சாமியத்தால் இடப்பெயர்வின்றி இயக்கம் இன்மைபோல் தோற்றுகிறதே ஒழிய, இயக்கமற்றதாய் வராது. இப்படி யோசிக்கும்போது அசைவற்றதாய்த் தோன்றும் பொருள்கள் யாவும், அப்படித் தோன்றுவதற்கு அவைகளை இயக்கும் சத்திகள் சமானமாய் நிற்றலே காரணம் என்பது புலப்படும். எல்லாப் பொருள்களும் இடப்பெயர்விற்கு ஆயத்தமாய் நிற்கின்றன. அவைகள்மேல் நாளு வழியிற் சென்றிருக்கும் சத்திகள் பலவும் சமானமாய் நிற்றலால் வெளிப்பட இயங்குவதற்குக் காரணம் இல்லை. அவற்றுள் யாதாயினும் ஒரு சத்தி மிகினும் குறையினும் இயக்கம் வெளிப்படுகின்றது. துலாக்கோலில் பாரக் குறைவு கூடுதலினால் அசைவு எப்படித் தோன்றுகின்றதோ அப்படியேயாம். ஆனதினால் சாங்கமாகிய இயக்க விதிகள் அசைவற்றதாய்த் தோன்றுகின்ற 'சாமிய சாங்க இயக்கத்தையும்' அசைவுள்ளதாய் வெளிப்படத் தோன்றுகின்ற 'அசாமிய சாங்க இயக்கத்தையும்' குறித்தனவாய் இரண்டு பெரும் பிரிவுடையனவாம்.

சாங்கமாக ஒரு பொருள் இயக்கப்படுங்கால், அதின் கதியாதிகள் ஒன்றுபோல் எப்போதும் இராமல், அந்தப் பொருளின் சில அவஸ்தாவிசேடங்களுக்குத் தக்கபடி வேறுபாடடைவதினால், அவ்வவஸ்தைகளையும் இந்நூலோர் கவனிக்க நேரிடுகின்றது. கடினம் நெகிழ்ச்சி ஆவியாகிய மூன்று அவஸ்தைகள் எப்பொருள்களுக்கும் உண்டு. இரும்பு செம்பு கல் மண் கடின அவஸ்தையையும், பால் நெய் நீர் நெகிழ்ச்சி அவஸ்தையையும், நீராவி புகை வாயு இவை ஆவி அவஸ்தையையும் இயல்பாய் விளக்கும். ஒரு பொருளே இந்த மூன்று அவஸ்தையையும் அடையலாம். ஜலம் ஆலங்கட்டியாகவும் ஜல ஆவி அல்லது மேகமாகவும் விளங்கி மூன்றவஸ்தையையும் காட்டும். பொன் இயல்பாய்க் கடினமாய் இருப்பினும், அக்கினியால் உருகி நெகிழ்ச்சியையும், பின்னும் வெம்மை மிகுதியால் புகைந்து ஆவித்தன்மையையும் அடையும். இப்படியே சகல பொருள்களும் இந்த அவஸ்தாத்திரயத்தை அடையக்கூடியவையே. போதுமான சக்தி உளதேல் இரும்பை ஆவிரூபமாயும், காற்றைக் கடினரூபமாயும் மாற்றலாம் என்பது இந்நூலோர் கொள்கை. இம் மூன்று அவஸ்தைகளுக்கும் முறையே 'கடினம்'

'நெகிழ்ச்சி' 'ஆவி' என்றுவது 'நிலம்' 'நீர்' 'கால்' என்றுவது பெயரிட்டலாம். இந்த அவஸ்தானுசாரமாகப் பொருள்களின் சாங்க இயக்கம் இருப்பதினுல் இயக்கவிதிகள் ஒவ்வொரு அவஸ்தையையும் தனித்தனியே விசாரித்து நிச்சயிக்கவேண்டிய தாக இருக்கின்றது. இயக்கத்தால் ஒரு கல் அடையும் கதியும் ஒரு நதி அடையும் கதியும் வாயு அடையும் கதியும் சற்றே கவனித்துப்பார்க்கில், வெவ்வேறு தன்மையவென்பது புலப்பட லாம். ஆதலினுல் இவ் இயக்கநூல் எல்லா அவஸ்தைகளுக்கும் பொதுவான விதிகளை நிரூபிப்பதோடு ஒவ்வொரு அவஸ்தைக் குரிய சிறப்புவிதிகளையும் விசேடமாய் ஆராய்ந்து விரித்துரைக்கக் கடமைப்பட்டதா யிருக்கின்றது. அப்படி அவஸ்தைகளைத் தனித்தனி சோதிக்கும்போது அவ் அவஸ்தை உடைய பொருள் கள், சாமிய இயக்கத்தால் நிலைபெறுதலும் அசாமிய இயக்கத்தால் நிலையில் நீங்கலும் ஆகிய இரண்டு பிரிவையும் இந் நூல் கவனிக்க வேண்டியதுண்டு. ஆதலால் சாங்க இயக்கம் பொதுவாய் 'சாமிய சாங்க இயக்கம்', 'அசாமியசாங்க இயக்கம்' என இரண்டு பிரி வினை அடைந்து அவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனி 'நிலவகை சாமியசாங்கம்' 'நிலவகை அசாமிய சாங்கம்': 'நீர்வகை சாமிய சாங்கம்' 'நீர்வகை அசாமியசாங்கம்' 'கால்வகை சாமியசாங்கம்' 'கால்வகை அசாமியசாங்கம்' என்றிப்படி ஆறுவகைப் படு கின்றது.

### கஅ. அணுவெனப் படுவது பிரிபடாப் பகுதி மூலங் கலப்பென வாமிரு வகையே.

மேற்கூறியபடி பொருள்கள் சாங்கமாக இடப் பெயர்ச்சி அடைவதும் அடைய எப்போதும் முயலுவதும் ஆகிய இயக்க மன்றி 'அணு இயக்கம்' என இரண்டாவது ஒரு குணத்தையும் உடையன. அவ் அணு இயக்கத்தைப் பரியாலோசிக்கு முன் 'அணு' என்பதுதான் என்ன வென்று நிச்சயிக்க வேண்டிய துண்டு. ஓர் இரும்புப் பிண்டத்தைச் சிறுசிறு கண்டதுண்டங் களாகத் துண்டித்து, அப்படித் துண்டிக்கப்பட்ட ஒரு சிறு துண்டத்தை மறுபடியும் துண்டித்து, மேல் துண்டித்தற்கு நம்மால் மாத்திரம் அல்ல, எவராலும் எக்கருவியாலும் ஒரு போதும் முடியாதென்று பாவிக்கத்தக்க பங்குக்கு 'இரும்பணு' என்று பெயர், இப்படியே சகல பொருள்களும் இவ்விதம்

பாகிக்கப்படில் அந்த அந்த அணுக்களாகப் பிரியும். ஆன்தினால் பங்கிட அசாத்தியமாக எண்ணப்படுகின்ற பங்கு அல்லது பகுதிக்கு 'அணு' எனப் பெயர். ஆனால் இப்படிப்பட்ட அணுக்களில் பலவும், வேறுவழியாய்ப் பின்னும் பிரிப்பதற் கிடங் கொடுக்கும். ஜல அணுவானது ஜலக்குணங்களுடன் மறுபடியும் பிரிக்க ஏலாது என்றல்லால், சில மின்மயாதி சத்தி விசேடங்களாலும் மற்றும் பிரிக்கப் படுகின்றது. ஆனால் அப்படிப் பிரிவுபட்ட பாகங்கள் ஜலக் குணங்களை எல்லாம் நீத்து சில புதுக் குணங்களுடன் வேறு இரண்டுவகை அணுக்களாக ஆவிர்ப்பவிக்கின்றன. ஆனால் இரும்பணு இப்படிப் பிரிக்கப் படுகிறதில்லை. பிரிபடும் என்று எண்ணவும் நாளிதுவரை ஒரு வழியும் காணவில்லை. ஆனதினால் அணுக்கள் இரு பகுப்புடையனவாக இந்நூற் பிரவர்த்தகர்கள் பிரிக்கின்றார்கள். ஒரு விதத்திலும் பிரிக்க ஏலாதவைகளை 'மூல அணு' 'அவ்வியாகிருத அணு' 'பூத அணு' எனவும், பிரிக்கும்போது தன் குணங்களைவிட்டு நீங்கி வேறு பொருளின் அணுக்களாக மாறுகின்றவைகளைக் 'கலப்பணு' 'வியாகிருத அணு' 'பௌதிக அணு, 'சங்கீரண அணு' எனவும் கூறப்படும். வியாகிருத அணுக்களைப் பஞ்ச பூதங்களாய் இந்நாட்டு அணுவாதியர்கள் பிரிப்பதினால் 'பஞ்சீகிருத அணுக்கள்' எனவும் கூறுவதுண்டு. இவற்றிற்கு முறையே இரும்பணுவும் ஜல அணுவும் உதாரணமாம். அவ்வியாகிருதமூல அணுக்களையும் அவை தம்முள் கலந்து பஞ்சீகிருத பௌதிக அணு ஆவதையும் பின்னீடு சிந்திப்போம். இவ்விடத்தில் பொதுவாக அந்த அந்தப் பதார்த்தங்களுடைய குணங்களுடன் விளங்கும் அணுக்களை, அவைகள் மூல அணுக்களோ அல்லது கலப்பணுக்களோ என்ற விபாவனை யில்லாது கவனிப்பது போதுமாயிருக்கின்றது.

கக. ஆனுமா னீக மணுவி னியக்கம்
வெம்மை யொளிமின் மயமதன் பயனே.

இப்படியுள்ள அணு புலன்களுக்குப் புலப்படத் தக்கதன்றென அதின் வருணனையாலேயே விளங்கும். நுண்ணிய அனுமானத்தால் அதன் இருக்கை ஸ்தாபிக்கப்படாவிடின் அணு ஒரு பாவனை பதார்த்தமாகவே முடியும். இக் காரணத்தாலேயே இத்தேச அணுவாதியரில் சிலர் அதனை 'யோகிப் பிரத்தியக்ஷம்' எனக் கூறுகின்றார்கள். இவ் அணுக்கள் ஒரு பண்டமாகச்

சேர்ந்திருக்கும்போது அவைகள் ஒவ்வொன்றிற்கும் இடை இடையே வெறும் வெளியுளது. அணுக்களே புலனுக்குத் தோன்றாதபோது அவ் அணுக்களின் நடுவிலுள்ள அந்தராளமும் அப்படியே எனக் கூறவேண்டியதின்றே. இத்தன்மையான வெளி இடை இடையே இல்லையெனின் ஒரு பொருளையும் அழுத்தி இறுகச் செய்தல் கூடாததாகும். ஒரு பொருள் இறுகுகின்றதென்பது அப்பொருளின் அணுக்களுக்கு இடை இடையேயுள்ள வெளி சுருங்குகின்றதென்பதுதான் கருத்து. போதுமான வலிமையுளதேல் இரும்பு முதலிய எப்பொருளை யும் சுருங்கச் செய்யலாம். ஆகவே எல்லாப் பொருள்களும் அணுவால் ஆக்கப்பட்டிருக்கின்றன வென்பதும், அவ்வணுக்கள் இடை இடையே வெறும் வெளியுளதென்பதும் ஒப்புக்கொண் டாலோசிக்கும்போது, அவ்வணுக்களுக்குள்ள இயக்கம் வெளிப் படும். மேற்கூறியபடி ஒரு பொருள் சுருங்கும்போது அதன் அணுக்கள் தங்களுக்குள் நெருங்கி இடை இடையேயுள்ள வெளி குறைகிறதென்றும், விரியும்போது அணுக்கள் அகன்று அவ் வெளி மிகுகின்றதென்றும் நிர்ணயிக்கப்படுமாயின், ஒரு பொருள் இடம்பெயராது இருந்தபடியே இருக்க அதன் அணுக்கள் சலனமுறலா மென்பது புலப்படுகின்றது. இவ்விதமாய் யூகிக்கப் படும் சலனத்திற்கே 'அணு இயக்கம்' என்று பெயர்.

இவ் அணுவியக்கத்தால் நேரிடும் பயன் அநேகம். 'நிலம்' 'நீர்' 'கால்' என்று முற்கூறிய பொருளின் அவஸ்தாபேதங்கள் அவ் அணு இயக்கத்தாலேயே நேருகின்றன. அணுக்கள் நெருங்கு கின்றபோது அவற்றின் இடை சுருங்கிச் சுலபமாய் வேறொரு பொருள் அப்பொருளினூடு புகுதற்கு வழியில்லாது கடினம் என்னும் குணமும், அவ்விதம் நெருங்காது எளிதாய் மறு பொருள்கள் புகுவதற்கு இடையுளதெனின் நெகிழ்ச்சி என்னும் குணமும், அப்படி மிகவும் அகன்று அதி இலகுவாய்ப் பிற பொருள்கள் உட்புகுவதற்கு இடம் கொடுக்கில் ஆவித்தன்மை என்னும் குணமும் புலப்படுத்தி, அவ் அணுக்கள் தங்கள் இயக்கத்தால் பொருள்களுக்கு நிலம் நீர் கால் என்னும் மூன்று அவஸ்தையும் உண்டுபண்ணுகின்றன. இது வெளிப்படையாய் ஒரு பொருள் அதனிடம் விட்டு மற்றோர் இடம் விலகுகின்ற தற்குச் சமமாக நினைக்கக்கூடியதாய் இருக்கிறது. மற்ற அணு இயக்கங்கள் இங்ஙனம் அன்று. வீணையின் தந்திகளை விரலால்

கடவுங்கால் அவை நடுங்குவதுபோல அணுக்களும் தம் நிலை பெயராது நடுங்குதலுண்டு. இவ்விதம் ஒருவாறாக நடுங்கும்போது நமக்கு 'வெப்பமென்று' விளங்குகின்ற ஒரு குணம் உதய மாகிறது. வெம்மை ஒரு கிரமமான இவ் அணுநடுக்கமென்பது இந்நூலார் துணிபு. அவ்வாறே மற்றொரு விதமான அணு நடுக்கம் 'ஒளி' யென நமக்குப் புலப்படுகின்றது. தந்திவழியாய் சமாசாரங்கள் தூரதேசத்திற்கு ஒரு நொடியில் தெரிவிக்க ஹேதுவாய் நிற்கின்ற 'மின்மய சக்தியும்' அணுக்களின் மூன்றாவ தான ஒருவித நடுக்கமே. இந்நடுக்கத்தின் ஒரு பேதமே காந்தத்தின் ஆகருஷணசக்தி. இவ்வாறு 'வெம்மை' 'ஒளி' 'மின்மயம்' முதலான குணங்கள் எல்லாம் அணுவின் இயக்கத் தால் நேருகின்றபடியால், இயக்கநூலின் இரண்டாம் பாகம் இக்குணங்களின் இயல்பையும், அவை செய்யும் தொழிலையும், அத்தொழிலுக்கு இயல்பான விதிகளையும் ஆராய்ந்து விவரிக் கின்றது. பிரத்தியக்ஷமாய்ப் புலப்படுகின்ற வெம்மை குளிர்ச்சி ஒளி இருள் இவைகளை விட்டுவிட்டு, கண்ணுக்கெட்டாத அணுக் களைக் கற்பித்து அவைகளுடைய பற்பல நடுக்கமாக இவைகளைப் பாவிப்பதில் பயன் என்னை என்று ஐயுறுவோர்க்கு, அப்பாவனை யால் அடைந்திருக்கும் நுட்பமான உணர்வுகளை விரித்துரைக்கும் அந்நூல்களையும் அந்நூலறிவில் சிற்சிலவற்றைத் தந்திர யுக்தி யுடைய சிலரால் உபயோகப்படுத்திச் சமைத்திருக்கு மின் தந்தி முதலிய கருவிகளையும் சான்றாகக் காட்டுவதொழிய மற்றப்படி தெளிவித்தற்கு இது தருணம் அன்று.

## ௨0. இயக்கநூல் சத்திநூ லெனப்பெயர் பெறுமே.

முன்சென்ற தத்துவநூலில் நின்றும் காலதேச வஸ்து வாகிய மூன்று தத்துவங்களையும் கணிதநூலின் பிரதானமுடி புகளையும் தனித்தாபிதங்களாகக் கொண்டு, ஆங்காங்கு வேண்டுழி கணிதநூல் மார்க்கங்களை அனுஷ்டித்து, மேற்கூறியபடி சாமியா சாமியமாய் நிலம் நீர் கால் என்னும் அவஸ்தாபேதங்களையுடைய பொருள்கள் இயங்குகின்ற சாங்க இயக்கத்தினையும் வெம்மை ஒளி மின்மயம் முதலானவற்றிற்குக் காரணமாய் நிற்கின்ற அணு இயக்கத்தினையும் ஆராய்ந்து அவற்றின் குணவிசேடங்களையும் தொழில் வேறுபாடுகளையும் திட்டப்படுத்தி அறிந்து அவ்வ வற்றிற்குரிய விதிகளை ஒழுங்குபட விரிக்கும்நூல் முதனூலில்

மூன்றாவது நூலாகும். இந்நூலிற்குப் 'பிரகிருதி விஞ்ஞானம்' 'பதார்த்தகுண விஞ்ஞானம்' எனும் பல பெயர் பொருத்தமுள தேனும், இந்நூலில் விவகரிக்கப் படுபவையே சத்தி வலிமை என்று நாம் வழக்கத்தில் கூறுவதாயும், பிரகிருதி என்பதும் இவ் விடத்தில் இப்பொருளையே குறிப்பிக்கின்றதாயும் இருக்கின்ற படியால், தமிழில் 'சத்திநூலென்று' பெயரிடுதல் உசிதமாய்த் தோற்றுகிறது. இந்நூலை விசேடமாய் ஆராய்ச்சிபண்ணி வளர்த்தின பெருமை ஐரோப்பு தேசவாசிகளுக்கே உரித்து. இவற்றிற்குக் கருவிப்பிரயோகம் இன்றியமையாத சாதனம். வியாபாரம் கைத்தொழில் யந்திரத்தொழில் இவைகளுக்கு இந்நூலால் விளைந்திருக்கும் உதவிக்குக் கணக்கில்லை. மேல்விளை யத்தக்க பயன்களை மதிப்பதும் அரிது.

உக. நிறையொழி பண்பெலாம் பிறழ்தரச் சரிமுறை
யளவிற் பிறழா வாகிய வணுவின
மிரண்டறக் கலத்த லிலக்கிய முயக்கம்.

நான்காவது முதனூலானது முற்கூறியதினும் நுண்ணிய ஆராய்ச்சியைச் செய்கின்றது. சகல பொருள்களும் அதனின் அணுத்திரளின் சேர்க்கையால் ஆக்கப்பட் டிருக்கின்றனவென் றும், அந்த அணுக்கள் பெரும்பான்மையும் வேறு பல பொரு ளின் அணுக்களாகப் பிரிக்கக் கூடியவையென்றும், அப்படி முடிவில் பிரிபடாதபடி நிற்கின்ற அணுக்கள் மூல அணுக்கள் எனப் பெயர்பெறும் என்றும் இதற்கு முன்றானே சூசிப்பிக்கப் பட் டிருக்கின்றன. அப்படியாயின் இவ் அணுக்கள் ஒன்றோ டொன்று புணரும் தன்மை எல்லாப் பதார்த்தங்களுக்கும் பொதுவானகுணமாயும், இயக்கமும் இயக்கத்தால் உண்டாகும் குண விசேடங்களும்போல விரிவில்லாததானாலும் இக்குணம் அவற்றிற்கு அடுத்த விரிவினையுடையதாயும் புலப்படலாம். இவ் அணுப் புணர்ச்சியின் இலக்கணம் பலவுள. ஜலஅணு பிரிக்கக் கூடிய பஞ்சிகிருதஅணு என்று முன் கூறப்பட்டதே. அதனை மின்மயாதி சத்திகளால் பிரித்திடில் ஜலத்தோடு சிறிதும் ஒற்று மையற்ற 'ஜலஜனக வாயுவும்' 'அனலன்' எனும் மற்றொரு வாயு வும் வெளிப்படும். இவற்றிற்கும் முன்னிருந்த ஜலத்திற்கும் ஒருகுணத்திலும் பொருத்தமில்லை. முன்னிருந்த ஜலம் இந்திர ஜாலமாக எங்கேயோ மறைந்து நூதனமாக இரு புதுப் பொருள்

கள் அதற்குப் பதிலாகத் தோற்றினவோ என்னும் வியப்புண்டாகலாம். மறுபடியும் இவ்விரண்டு வாயுக்களையும் கலந்திடில் அவை மறைந்து முன்னிருந்த ஜலம் வந்து தோன்றும். இது முன்னிருந்த வாயுக்களின் சேர்க்கையே என்பதற்கு, அவ்வாயுக்கள் எவ்வளவு கனம் உடையதாயிருந்தனவோ அந்நிறை புதிதாய் வந்த ஜலத்திற்கும் இருப்பதே சான்று. மற்றைக்குணங்களும் எவ்விதம் நெகிழினும், இந்நிறை மாறாது நிலைநின்று முன்னிருந்த பொருளுக்கும், பின் பிரிவினால் ஆவிர்ப்பவித்த பொருளுக்கும் உள்ள தாதான்மியத்தை உணர்த்தும். இதுவன்றி மற்றொரு நியமமும் இவ்வாச்சரியமான அணுப்புணர்ச்சிக் குளது. இவ் அணுக்கள் 'சரிமுறை அளவின்படி' அன்றிப் புணரா. ஓர் எண் மற்றோர் எண்ணுக்கு இன்னபாகமென்று விளக்கும் எண்ணை அவற்றின் 'முறை' என்பதும், இரண்டு முறைகள் ஒன்றுக்கொன்று சரியாயிருக்கும்போது 'சரிமுறை' என்பதும் அங்ககணித சங்கேதம். (௩) க்கு (௪) எப்படியோ அப்படியே (௧௫) க்கு (௨0)ம் (௨௧) க்கு (௨௮) ம் (௧0௮) க்கு (௧௪௪) ம் என்றிப்படி வருபவைகளுக்குச் 'சரிமுறை' யென்றும் 'சரிமுறை இணை' யென்றும் கூறுவர். அணுக்கள் புணரும்போது இச்சரிமுறைப்படியே புணரும். ஜலஜனக அணு (௫) க்கு அனலவாயு அணு (௮) ஆகப் புணருவதானால் முன்னதில் (௩௫) இருக்குமேல் பின்னதில் (௪0) ஒடு அன்றிப் புணராது. (௪௧) இருக்கில் மீதியான ஓர் அணு புணரவகையற்றுத் தனித்து நிற்கும். (௩௯) மாத்திரம் இருக்கில் அவற்றிற்குரிய சரிமுறையான ஜலஜனக அணுவோடு புணர்ந்து கொள்ள, மிஞ்சுகிற ஜலஜனக அணுக்கள் புணரவகையின்றித் தனிக்கும். இப்படி அணுக்கள் தங்கள் நிறையொழிய மற்றெல்லாக்குணங்களையும் நீத்து ஒன்றோடொன்று புணர்ந்து, இரண்டு பதார்த்தங்களாக இருந்த தன்மையைவிட்டுப் புதிதான ஒரு பொருளாகப் பாவிக்கின்றதற்கு 'ஐக்கிய முயக்கமெனக்' கூறலாம். சிலர் எண்ணுதல்போல "உப்போடப்பை மருவ விடுதல்*" பூரண ஐக்கியம் அன்றென்பது மேற் கூறியதினாற் போதரும். ஜலத்திற் கரைந்த உப்பு கண்ணுக்குக் காணவிடினும் நாவிற்குப் புலப்படும். கடினமாகிய ஓர் அவஸ்தையொழிய உப்பின் எல்லாக்

* தாயுமானவர், "உப்போடப்பை மருவ விட்டும் ஐக்கிய முன்னிருந்தாகிற்பேன்."

குணங்களும், உவர்நீரில் இருக்கின்றனவே. ஆதலால் உப்பும் அப்பும் இரண்டறக் கலந்து ஐக்கியப்படுபவை அன்று. மணலும் சீனியும் கலப்பதுபோலாம். இப்படியுள்ள கலப்பிற்கு 'வெறும் கலவை' என்று கூறலாகும். இரண்டறக் கலத்தலுக்கே 'ஐக்கிய முயக்கமெனப்' பெயர்.

உஉ. முயக்க நூலிர சாயனமா மதுவு
மியல்பு சாரீர மெனவிரு வகையே.

மேற்கூறிய ஐக்கிய முயக்கங்களை ஆராயும் நூல் 'இரசாயன நூலெனப்' பெயர்பெறும். இத்தேசத்து வழங்கிவந்த 'தாதுவாதம்,' 'இரசவாதம்' என்னுங் கலைகளுக்கும் இந்நூலுக்கும் விஷயப்பொருத்த மிருக்கினும் அனுஷ்டானமார்க்கமும் உத்தேசமும் வேறென நினைக்கவேண்டியதுண்டு. இந்நூல் மேற்கொண்டிருக்கும் தொழில் மிகவும் வருத்தமுடையது. காணும்படியான ஒவ்வொரு பொருளின் அணுக்களும் பிரிக்கக் கூடியனவா? அன்ரு? எனவும், பிரிக்கக்கூடுமேல் அவை என்ன என்ன அணுக்களாகப் பிரியும்? எனவும், அந்த அணுக்கள் என்ன என்ன சரிமுறைக் கிரமமாய் ஐக்கியப்படும்? எனவும், மேலும் அவ் அணுக்கள் தாமே வேறு அணுக்களாகப் பிரிக்கப்படுபவையா? அன்ரு? எனவும், அப்படி ஒருவகையாலும் பிரிக்கமுடியாதாகி நிற்கும் மூல அணு இனங்கள் எத்தனை? எனவும், அவற்றின் தனிக் குணங்கள் என்ன? எனவும், அவை முயங்கிப் படிப்படியாய்ப் பௌதிக அணுவாகும்போது என்ன என்ன குணங்கள் முறை முறையே ஆவிர்ப்பவிக்கின்றன? எனவும், இப்படி எண்ணற்ற சங்கதிகளை நிச்சயிக்கும் தொழில் இலகுவல்லவே! வாளா இருந்து மனக்கணக்கிடுதலால் இவை வெளிப்படா. பரிகை வகையாய்ச் சோதனைபண்ணி நிராகரிக்கத்தகாத தெளிவுடன் ஒவ்வொன்றும் நிர்ணயிக்க வேண்டியதன்ரே? இதற்குக் கருவிப் பிரயோகமும் காலவிளம்பனத்தால் மாத்திரம் ஜனிக்கக் கூடிய அனுபவ விருத்தியுமின்றிச் சற்றும் முடியாது.

கஅகூ-ஆம்ஙூ வரையும் இந்நூலார் செய்த முயற்சியாற் பிரிபடாமல் நிற்கின்ற அணுக்கள் (கூஎ) வகைப்படும். இவற்றைத் தற்கால நிலைமையில் (கூஎ) அவ்வியாகிருத மூலபூதங்கள் என்றே ஒப்புக்கொள்ளவேண்டியதாக இருக்கின்றது. இனிமேற் செய்யும் முயற்சியால் இவை பிரிவுபட்டு (சo) (௩o) அல்லது (ச) (ரு) என

வரலாகாதென்பது ஒருவர் கருத்துமன்று. கூடிய அளவும் அவ் வியாகிருத பூதங்களின் தொகை குறைக்கவேண்டுமென்பது இந் நூலோர் முயற்சி. இந்த (கூஎ) பூதத்தால் எல்லாப் பதார்த்தங் களும் ஆக்கப்பட்டிருக்கின்றதை யந்திர விசேடத்தால் தற்காலம் நிரூபிக்க அவர்கள் வல்லவர்களே. (கூஎ-ம்) மூலபூதங்கள் அல்ல வென்று மேல் நிரூபிக்கப்பட்டபோதினும் நாளிதுவரையும் செய்துவருகின்ற இரசாயன விச்சேத வழியாகவே அதுவும் நடக்கவேண்டியதாக இருப்பதினல், அறிந்த அளவும் (கூஎ) பூதங்களாகப் பொருள்களைப் பிரித்துக் கணக்கிடல் உண்மைக்கு வழுவுமன்று. ஆனதினல் நம் முன்னோர் அவ்வியாகிருத பூதங் கள் நிலம் நீர் தீ கால் வான் என ஐந்தே உள எனத் துணிந் தது, எவ்விதமென்று புலப்படும்பரியந்தமும் தாற்காலிகமாகப் பரீக்ஷையினல் நிராகரிக்கத்தகாத பிரத்தியக்ஷானுபவமாக இருக் கும் (கூஎ) யும் அங்கீகரிப்பதில் ஆக்ஷேபமில்லை. ஆக்ஷேபம் உடையார் (கூஎ)ல் யாதானும் ஒன்றைப் பிரித்துக் காட்டில் தங்கள் ஆக்ஷேபத்தை நிலைபெறச் செய்வதோடு இந்நூற்கும் அனுகூலம் செய்தவராகவும் ஏற்படுவார். இந்நூலின் பிரயோக விசேடங்களில் சிற்சில இத்தேசத்தில் வழங்கிவந்தனவே யெனி னும் இந்நூல் ஆதியந்தம் நவீன நூல் என்றே கூறத்தகும். பழங் காலமுதல் இந்நாடாதியாய் எந்நாட்டிலும் இருபொருளின் சேர்க்கையால் நூதனப் பொருள் உண்டாமென்ற இரசாயன உணர்வு உண்டாயிருந்தும், நிஷ்காமியமாய் நூல் இரீதியாய் விசா ரணை செய்யாமல், இரும்பு முதலியவற்றை விலைபெற்ற பொன் முதலியவாக மாற்றுவதற்கேற்ற வழிகளை நாடிக் காலம் வாளா கழியும்படி நேர்ந்தது. இழிந்த உலோகங்களைப் பொன் முத லியவாகச் செய்ய இச்சிக்கின்ற இரசவாதத் தொழில் அசாத் தியம் என்று சாதிக்க ஒருவரும் கடமைப்பட்டவர் அன்று. அது கைகூடி, காணுகின்ற கல்மலைகள் யாவற்றையும் பொன்மலைக ளாக மாற்றினல் எவ்வளவு நன்மையுண்டாமென்று இரசவாதி யர்கள் சங்கற்பிக்கின்ருர்களோ, அதனைவிட வாஸ்தவத்தில் நூறு மடங்கன்று, அதிலும் எவ்வளவோ அதிகமான நன்மை, உண்மை அறிய விரும்பிய மதியாளர்கள் தங்கள் கைப்பொருளும் வாழ் நாளும் நிஷ்காமியமாய் அளித்து, பயின்றேற்படுத்திய இவ் இர சாயன நூலால் பொதுப்பட உலகத்திற்கு நாளிதுவரையும் ஜனித் திருக்கிறதென்று இந்நூலோடு ஊடாடிய யாவருக்கும் ஐயமற

விளங்குமென்பது ஒன்றே இவ்விடத்திற் குறிப்பிக்கவேண்டிய துண்டு.

இந்த நூல் இருபெரும் பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. ஒரு பொருளை மற்றநேக பொருளாகப் பிரிக்கின்றதும், பின்னீடு அவைகளைச் சேர்த்து அணுமுயக்கம் செய்து முன்னிருந்த பொருளாகப் பண்ணுகின்றதும் இந்நூலின் முக்கிய தொழிலெனக் கூறப்பட்டதே. எப்பொருளும் இவ்விதமான இரு தொழிற்கும் இடம் கொடுப்பதில்லை. ஜல அணுவானது இரு வகை அணுக்களாகப் பிரிக்கப்படுவதுமன்றிப் பின் அவைகளை முயக்கில் ஜலம் பிரயாசமின்றி உண்டாகின்றது. அவ் வணுக்கள் ஒன்றோடொன்று சமீபமாயிருந்திடில் தானே சென்று முயங்குகின்ற ஆகருஷணசக்தி அவற்றுள் தங்கி இருக்கின்றது. ஆதலால் அவைகளைப் பிரிப்பதே வருத்தம்; முயக்குவதன்று. ஒருவகை அணு மற்றொரு அணுவகையோடு முயங்கிநிற்கும். நிற்கும்போது அப்படி முயங்கி நிற்கின்ற அணுவைவிட, அதற்கு அதிகபலமான ஆகருஷண இச்சையுடைய மற்றொருவகை அணுவைச் சமீபமாய் வைத்தலே, அதனை முன்முயங்கி நிற்கின்ற அணுவினின்றும் பிரிப்பதற்குச் சாதாரண உபாயம். கழற்சியிற் பிரியமுடைய ஒரு குழந்தை கையில் அகப்பட்ட கத்தியை அக்குழந்தையினின்றும் பிரிப்பதற்குக் கழற்சியைக் காட்டும் தந்திரம்போலவேயாம். ஆதலால் பொதுவாக இரசாயன நூலோர்க்குப் பதார்த்தங்களை அவைகளின் மூலபூதமாகப் பிரிப்பதே வருத்தம். பிரித்தபின் கூட்டுவதற்கு அவைகளைச் சமீபமாய் விட்டிடில் அவைகளின் ஆகருஷண சத்தியே போதுமாய் வரும். ஆனால் இந்நியமத்திற்கு விபரீதமான பதார்த்தங்களும் உள. அவைகளைப் பிரிப்பது கூடியதாயும் பின் ஒன்றுபடப் பண்ணி முன்னிருந்த பதார்த்தமாக ஆக்கிக்கொள்ளல் இதுகாறும் கூடியதன்றாயும் இருக்கின்றது. இப்படிப்பட்ட பதார்த்தங்களை நோக்குங்கால் அவையெல்லாம் உயிருடையவைகளின் உறுப்புக்களாக இருக்கின்றன. ஒரு மரத்தின் இலையோ பட்டையோ, ஒரு விலங்கின் சதையோ நகமோ இவற்றில் யாதொன்றையும் பிரித்தபின் ஒரு இரசாயன விதியாலும் கூட்டி உற்பத்தி பண்ணல் சிறிதும் கூடியதன்று. அப்படிக் கூட்டி மறுபடியும் உண்டு பண்ணத்தக்க பொருளெல்லாம் உயிருள் பொருள்களின் சரீர சம்பந்தமின்றி, கல், மண், வாயு, ஜலம் போன்ற இயற்பொரு

ளாய் இருக்கின்றன. இவை இரண்டிற்கும் இரசாயனவிதிகள் வேறு வேருக ஏற்படவேண்டிய துண்டு. ஆதலால் இரசாயன நூலானது 'இயற்பொருள் இரசாயன நூலென்றும்' 'சாரீரிக இரசாயன நூலென்றும்,' இரண்டு பெரும் உட்பிரிவுகளையுடைத்தாயிருக்கின்றது. சாரீரிகப் பொருளின் விசேடம் மேலே விசாரிக்கப்படும். முதனூலில் நான்காவதாகிய இவ் இரசாயன நூலுக்கும் முன் சென்ற மற்ற முதனூல்களுக்கும் உள்ள சம்பந்தமும் முறைக்கிரமமும் இதுவரைக் கூறியதினல் வெளிப்பட்டிருக்கலாம். தத்துவநூலில் நின்றும் கால தேச வஸ்து சத்தி என்ற தத்துவங்களையும் கணிதநூலின் சிற்சில முடிவுகளையும், சத்திநூலில் நின்று பற்பல துணிவுகளையும், விசேடமாய் அணு இயக்க பாகத்தில் உள்ள பெரும்பான்மையான சோதனைக்கிரமங்களையும் விதிகளையும், தனித்தாபிதமாக இந்நூல் அபேக்ஷிக்கின்றது. பதார்த்தங்களை முற்றும் பிண்டமாய் ஆராயா விடினும் முன் சென்ற நூல்கள்போல ஒவ்வொரு குணங்களை மாத்திரம் கேவலமாகப் பாவித்து விசாரிக்க ஏலாது பற்பல குணங்களைத் திரட்டித் தொகுத்தே சிந்திக்கின்றது. இப்படிக் கேவலத்தன்மையிலும் முன்சென்ற நூல்களுக்கு இது தாழ்வுடையதென்பது சொல்லாதே போதரும்.

௨௯. உறுப்போ டமைந்த வுடம்புடைத் தாகி
யுண்ணலுற் பாதனம் பண்ணுயிர் யாவுந்
தாவரஞ் சரமென வாமிரு வகையே.

இதுகாறும் உயிர் உள்ளன அல்லன ஆகிய சராசரங்கள் எப்பொருள்களுக்கும் பொதுவான குணங்கள் ஆராயப்பட்டன. அவை யாவும் கணக்கிடத்தக்க பேதபின்னங்களையும், நெட்டை கட்டை அகலம் ஆதியான தேசவிகற்ப உருவங்களையும், பொது விதியால் நிதானிக்கத்தக்க நிலைபெறல் நிலையினீங்கல் என்ற சாங்க இயக்கத்தையும், அணு இயக்கத்தால் வெளிப்படும் வெம்மையாதி வேறுபாடுகளையும், கருவிப்பிரயோகத்தால் பிரத்தியக்ஷீகரிக்கத்தக்கதாய் அவற்றுள் அநுசூதமாய் நிற்கும் அவ்வியாகிருதமூல பூதங்களின் முயக்கத்தையும், முயக்கத்திற் கேதுவான ஆகருஷண சத்தியையும் உடைத்தாயுள்ளன. மேல் ஆராயவேண்டிய உயிருள் பொருள்கள் கூறிய இக் குணங்களோடு, 'உயிர்த்தன்மை, 'ஜீவவியல்' என்னும் ஒரு விசேட குணத்தை

யும் பொருந்தியிருக்கின்றன. இதோ நிற்கிற மரத்திற்கும் அதன் அடியிற்கிடக்கும் கல்லிற்கும் உள்ள வேற்றுமை விசாரிக்கில், உயிரின் தன்மை வெளிப்படும். வடிவு நிறம் முதலிய குணங்கள் இரண்டிற்கும் பொது. வெம்மை முதலியவும் அப்படியே. இவைகளை நிலைபெறற்கோ நிலை நீக்கற்கோ வேண்டிய இயக்க சத்திகளும் ஒருவிதமே. இவையன்றி இப்பொருள்கள் இரண்டையும் இரசாயன நூற் பிரகாரம் பிரிக்கின் அவைகள் அந்நூலிற் கூறிய (௬௭) அவ்வியாகிருத மூல பூதங்களில் சிற்சிலவற்ருல் ஆக்கப்பட்டவையாயும் விளங்கும். மரத்திலுள்ள மூல பூதங்களே கல்லிலும் இருப்பனவென்று அல்ல: ஒரு கல்லில் உள்ள பூதங்கள் அன்றே கல்வகைகளாகிய எல்லாவற்றிலும் நிற்பன! ஒவ்வொரு பொருளும் வெவ்வேறு மூல பூதங்களின் சேர்க்கையாயிருப்பினும், அம்மூல பூதங்கள் கூறிய (௬௭)ல் புறம்பன்றே: அவ்வாறே இம்மரத்திலும் கல்லில் இல்லாத சில பூதங்கள் இருப்பினும் அவையும் (௬௭)ல் உட்பட்டனவே. அப்படியே மூல பூதங்கள் தனிப்பட முயங்கிநிற்பதும் சங்கீரண பௌதிகங்களாய் முயங்கிநிற்பதும் போதுமான வேற்றுமையாகாது. மரத்தில் இப்பூதங்கள் சங்கீரண பௌதிகங்களாய் எவ்வளவு கலந்து நிற்பினும், கல்லில் எவ்வளவு சுத்தமாய்த் தனிப்பட முயங்கி நிற்பினும், மூலபூதங்கள் கூறிய (௬௭)ல் உட்பட்டும், அவைகளின் முயக்கம் இரசாயன நியமத்தை அநுசரித்தும் நிற்பதிஞல், சுத்தம் கலப்பு என்ற வேற்றுமையால் அவற்றின் பேதம் வெளிப்படமாட்டாது. சற்றுமுன் இரசாயன நூலை இரு பிரிவாக்க நேரிட்ட காரணத்தை யோசிக்கில் இது வெளியாம். ஜலம் கல் முதலிய உயிரில் பொருள்களை இரசாயன விதிப்படி கிரமமாக மூலபூதபரியந்தம் பிரிப்பதுமாத்திரம் அன்றி அம்முறையே கிரமமாய் அப்பூதங்களையும் பௌதிகங்களையும் முயக்கி மறுபடி அப்பொருள்களை உண்டுபண்ணலாமென்றும், அப்படியே மரத்தினையும் சங்கீரண பௌதிகங்களாயும், முடிவில் மூல பூதங்களாயும் பிரிக்கலாமென்றும், அவைகளை முற்கூறியபடி முயக்கி மரமாக்கல் கூடாதென்றும் அவ்விடத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டது. இந்நூலோரில் ஆங்காங்கு சிற்சிலர் இஃதும் அசாத்தியம் அன்று என வாதித்தல் அவர்கள் கணக்கிடுகின்ற (௬௭) பூதமும் ஒன்றிரண்டு பூதத்தின் சங்கீரணமேயென்று மற்றும் சிலர் வாதித்தல் போல, மானசீகமான சங்கற்பமேயன்றி வியாவ

காரிகானுசாரமாய் நிரூபிக்கத்தக்கதன்று. சாக்ஷிப்படுத்தப்பட்ட உண்மைகளே நூலிற்குரியனவென ஆதியிற்றானே நூலிலக்கணம் கூறப்பட்டிருப்பதினால், இவ் வாதியர்களில் யாரேனும் வித்தில்லாமல் ஒரு மரத்தையோ அல்லது மரத்தின் யாதாவது ஒரு பாகத்தையோ, அதற்கு வேண்டிய மூலபூதங்களையோ அல்லது சங்கிரண பௌதிகங்களையோ முயக்கி உண்டுபண்ணிக் காட்டுமளவும், மூலபூதங்களின் ஆகருடண சத்திமாத்திரத்தால் மரமுதலியன உண்டுபண்ணப்பட்டவை அல்லவெனவும், அப்படி அம்மூல பூதங்களை இசையுமாறு புணர்த்தி தனதங்கங்கள் ஆக்கும்படி ஒவ்வொரு மரத்தினிடத்தும் இரசாயன விதிகளுக்கு மேற்பட்டதான ஒரு சத்தியிருக்கின்றதென்றும் ஒப்புக்கொள்ளுவதே நூல் இயல்பிற்குப் பொருத்தம். இவ்விதம் அனுமானிக்கப்படும் சத்திக்கு 'உயிர்' என்றும் 'ஜீவன்' என்றும் பெயர்.

பொதுவாக உயிருள் பொருள்களின் இலக்கணத்தை ஆராயும்போது அவை மூன்றெனத் தோன்றும். இவற்றுள் முதலாவது உறுப்புக்களுடன் கூடின உடம்பாம். உயிர் என்ற பிரதீதியினால் உடம்பென்ற வேற்றுமை பிறந்தது. உடம்பென்பது உறுப்புக்களால் ஆக்கப்பட்ட யாக்கை. ஒரு பொருளின் பல பாகங்கள் தனக்குத் தனக்கென ஒரு தொழிலும் அத்தொழிலுக்கேற்ற கட்டுப்பாடும் உளவேல் அப்பாகங்களுக்கு உறுப்பு அங்கம் அவயவம் எனப்பெயர். அப்பாகங்களை ஒன்றுபடக்கட்டி அப்பாகங்கள் பண்ணும் தொழில்கள் பலவற்றையும் ஒருமைப்படுத்தி அனுபவிக்கும் சமூஹத்திற்கு யாக்கை உடம்பு சரீரம் எனப் பல பெயர்கள் பொருந்தும். மரவர்க்கத்தில் யாதேனும் ஒரு புற்பூண்டை எடுத்துப் பார்ப்போமாகில், அதற்கு வேர் கிளை இலை பூ காய் எனப் பல பாகங்களும், அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு வடிவம் கட்டு குண முடையதாய் வேறு வேறு தொழிற்குரித்தாய் நிற்பதும் காணலாம். அப்படியே நாய் முதலியவற்றைப் பார்க்கினும் கண் கால் முதலிய வெளிப் பாகங்களும், அன்னாசயம் இரத்தாசயம் முதலிய உட்பாகங்களும் அவற்றின் கட்டுப்பாடு தொழில் முதலிய வேற்றுமைகளும் விளங்கும். ஆதலால் உறுப்பினால் ஆக்கப்பட்ட யாக்கை உயிர்களுக்கு முதலிலக்கணமாக அமைகின்றது.

## ௨௪. உண்ண லென்பது தன்மயப் படுத்தல்.

மேற்கூறிய உறுப்புக்களால் உயிர் செய்கின்றதொழில்பொது வாக இரண்டெனக் கூறப்படும். அவற்றுள் முதலாவது 'உண்ணுதல்'. இதோ நிற்கும் மரமானது அதன் வேரால் மண்ணி லுள்ள சில பௌதிகங்களையும் இலை முதலியவற்றால் காற்றி லுள்ள சில பௌதிகங்களையும், எல்லாப் பாகங்களாலும் விசேடமாய் வேராலும் ஜலத்தையும், உட்கொண்டு அவ்விதம் தனக்குக் கிடைத்த அந்த அந்தப் பொருள்களை, தனக்கு வேண்டிய பாகங்களாக மாற்றி, தன்மயமாகச் செய்து வளர்ச்சி அடைகின்றது. இப்படித் தன்மயப்படுத்தற்கே 'உண்ணல்' என்று பெயர். ஒரு பையினுள் நாணயமிடுதல் போலும் ஒரு பாண்டத்துள் யாதாவதொரு பண்டம் பெய்தல்போலும் அன்று, இவ் வுண்ணுதல். பஞ்சு, நெய் முதலியவற்றை உட்கொள்ளுதல் போலும் அன்று. உட்கொண்டவை அவ்வவற்றின் குணங்களோடு மீள வரக்கூடியவையாயும், அப்படி மீளாவிடினும் குண வேறுபாடடையாது, இடப்பெயர்ச்சி அடைந்தவை மாத்திரமாய் நிற்பவையாயும் இருப்பதினால், நாம் ஒரு வீட்டினுள் இருக்குங்கால் நம்மை அவ்வீடு உண்டவாறாகாததுபோல், பை பாண்டம் பஞ்சு முதலியனவும் ஒன்றையும் உண்டதாக வராது. உப்பை நீரில் கரைப்பதும் இப்படியே உண்பதல்ல. உப்பின் சகல குணங்களும் நீங்கி நீர்க்குணங்களையேற்று அந்நீரினை வளர்த்தாலொழிய அவ்வுப்பு நீரோடு தன்மயப்பட்டதாகாது. சில சங்கீரண பௌதிகங்களைக் கலந்த ஜலத்தில் வைக்கப்பட்ட சில விசேட திரவியங்கள் அப்பௌதிகங்களை ஆகருடணஞ்செய்து, அவற்றுள் தம்மோடு முயங்கத்தக்கவைகளைப் பிரித்து அவற்றோடு புணர்ந்து, வளருவதுபோலத் தோற்றினும் உறுப்பு வேறுபாடும் தொழில் வேறுபாடும் இன்மையால், அவை உயிருளவோ என்று மயங்குவதற்கு இடமில்லை. உண்ணலுக்கும் இவ்விதமான இரசாயன முயக்கத்திற்கும் உள்ள நுண்ணிய வேற்றுமையை விரிப்பதற்கு இது தருணமன்று. பொதுவாக அன்னியபொருள்களைத் தன்மயப்படுத்தித் தன் உடம்பிற்கு வேண்டிய அங்கங்களை உண்டுபண்ணி வளர்த்தும் சத்தி உயிருள்ளவைக்கே உரித்து. ஆனதினால் உண்ணல் என்பது உயிரின் முதல் தொழிலாம்.

## ௨௫. தனைப்போற் பிரதி சமைத்தலுற் பாதனம்.

பொதுவாக உயிர்கள் யாவும் செய்கின்ற தொழிலில் இரண்டாவது செய்கை உற்பாதனம். உறுப்புக்களோடு கூடிய உடம்பிலிருந்து அதுபோலவே எல்லா உறுப்புக்களும் கூடிய மற்றோர் உடம்பை உண்டுபண்ணும் சத்திக்கு 'உற்பாதனசத்தி' என்று பெயர். புல் பூண்டு முதலிய சகல உயிருள்பொருள்களும் தமக்கு இயன்ற பல பிற பொருள்களை உட்கொண்டு தன்மயப் படுத்தி, தம் அவயவங்களை வளர்த்துவதன்றி, தம்மைப் போல உறுப்புக்கள் அமைந்த தம் ஜாதி புற்பூண்டாதிகளை உண்டுபண்ணுகின்றன. அவற்றில் நின்றும் காய் உண்டாதல் இதன் பொருட்டே. இச்சத்தி உயிருள்ளவைகளுக்கன்றி மற்றொன்றிற்கும் இல்லை. ஒரு கல் ஆயிரம் துண்டுபட உடைந்து தன்னைப் போன்ற உருவும் குணனும் உடைய பலவாய்ப் பவிப்பதற்கும், ஒரு மரம் தன் சத்தியை வித்தினிடத்தில் அடக்கித் தன்னைப்போன்ற பல மரங்களை உற்பத்தியாக்குவதற்கும் எவ்வளவு பேதம்? கல் தனது பூர்வ இருக்கை இழந்தே இப்படிப் பல ஆகலாம். சில உயிருள்ளவைகளும் தன்னுயிர் இழந்தே தனைப் போல் பலவாகப் பவிப்பதுண்டெனினும், அவை புறனடைகளை யன்றிப் பொதுவான வழக்கமன்று. மேலும் பலவாய் உடைந்த கற்கள் ஒவ்வொன்றும் முன் ஒன்றாய் இருந்த கல்லைப்போலப் பருத்துப் பின்னும் இப்படிப் பல ஆதற்குக் கூடியதும் அல்ல. இங்ஙனம் தனக்குப் பிரதிப் பொருள்களாகத் தன்னிடத்தில் உற்பத்தியாக்கும் 'பிரத்தியுற்பாதனசத்தி' உயிருள்ளவற்றிற்கே உளது. ஆதலால் உண்ணல், உற்பாதனம் இவ் விரண்டுடன் யாக்கையும் சேர்க்கில் 'உயிரிலக்கணம்' மூன்றாம்.

## ௨௬. புலன் புலால் படைத்த வுடம்புடைத்தாகி யுணர்தலுஞ் சலித்தலு முடையன சரமே.

முற்கூறியபடி எல்லா உயிருள் பொருள்களையும் ஒப்பிட்டுப்பார்க்குங்கால் இம்மூன்று இலக்கணங்களே பொதுவாய் எங்கும் அமைவதாகத் தோன்றும். ஆனால் மரமும் அதிற் கட்டியிருக்கின்ற கன்றும் உயிருடையவையே யாயினும் எவ்வளவு வேற்றுமை உடையவை? உணவு ஏற்றலும் பிரத்தியுற்பாதன வல்லமையும் இரண்டிற்கும் உளவெனினும், இவ்இரண்டுவகை உயிர்களும் மற்றநேக விஷயத்தில் ஒப்புவமை அற்றனவாம்.

அதனால் உயிர் விஷயங்களை ஆராயும் இந்நூல் அவைகளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றது. முற்கூறிய தொழில் இரண்டையும் மாத்திரம் செய்கின்ற உறுப்பமைந்த உயிர்களுக்குத் 'தாவரம்' அல்லது 'மரப்பொது' என்று பெயர். பெரிது சிறிது, நல்லது கெட்டது, அழகுள்ளது அழகற்றது, உபயோகம் உள்ளது விபரீதம் செய்வது என்று இக்குணங்கள் அனைத்தும் இந்நூலுக்கு அவசியமில்லாததினால் தாவரங்களாகிய யாவையும் இந்நூல் பக்ஷா பேதம் இல்லாமல் நிஷ்காமியமாய் உண்மையை விளக்கும்படி ஆராய்ச்சி பண்ணும் ஆனதினால் ஒரு நாள் முழுதும் பலர்கூடி வெட்டினும் அசையாத பலமுடைய பெரிய ஆலும், அதின் அருகே கையால் தொடினும் உருவழியும் காளானும், நமக்கு ஜீவாதாரமாயிருக்கிற நெல்லும், வறிதே வளர்ந்து தொட்டாரைத் தினவினால் வருத்தும் கண்டூதி என்னும் காஞ்சொறியும், மனோகரமாய் வளரும் தாமரையும், அதை வளரவொட்டாது அது கிடக்கும் ஜலத்தையும் கெடுக்கும் பாசியும் ஆகிய இவை அனைத்தையும் ஒன்று போலவே கவனித்து, உண்மை விளக்குவதே இந்நூலின் செய்கை. ஆதலால் இவ்விடத்தில் தாவரம் என்பது மரங்கள் மாத்திரம் அன்று. செடி கொடி புல் பாசி முதலாகக் கண்ணுக்குப் புலப்படாமல் மழைகாலத்தில் புத்தகமுதலியவற்றின்மேல் வெண்மையாகத் தோற்றும் 'மழைப்பூப்பு'வரை யாவற்றிற்கும் இப்பெயர் பொது.

மற்றப் பெரும் வகுப்பிற்குச் 'சரஉயிர்' என்று பெயர். பொதுவாகப் பார்க்கில் இவைக்குத் தாவரங்களைவிட இரண்டு உறுப்பும் அவைக்கிசைய இரண்டு தொழிலும் கூடுதலுண்டு. பிற பொருள்கள் தம் உடம்பின்மேல் பல விதத்தில் தாக்குவதை உணரும் 'புலன்' என்னும் உறுப்பும், அப்படித் தாக்குதலுக்கேற்ற இடம்விட்டுத் தானே சலிப்பதற்குரிய 'புலால்' என்னும் உறுப்பும், எல்லாச் சரவுயிர்களுக்கும் உள. இவற்றை முறையே ஞானேந்திரியம் கருமேந்திரியம் எனக் கூறுவர்.

பிற பொருள்கள் தொடில் கூச்சமுற்றுச் சுருங்குவதுபோல இலைகளைச் சுருக்கிக்கொள்ளும் 'தொட்டால் வாடி' என்னும் முட்செடி, முற்கூறிய உணர்தலைக்காட்டிச் சரவுயிருக்கும் தாவரங்களுக்கும்உள்ள சம்பந்தத்தை உணர்த்தினும், இது தாவர இலக்கணத்திற்குப் புறனடையாய் வந்ததேயொழிய மரப்பொது

வின் குணமன்று. மேலும் இவ்வகைக் கூச்சம் உணர்வு என் மதிப்பதற்கேற்ற புலனுறுப்பும் இச்செடியிடத்தில்லை. சீரவுயிர்களிலோ இக்குணம் இல்லாதது ஒன்றுமில்லை. உயர்ந்த விலங்கினங்களுக்கு உள்ளதுபோல மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புலன்கள் ஐந்தும் இராவிடினும், தொட்டால் தெரிந்து கொள்ளும்படியான மெய்யென்னும் ஊறுறுப்பு இல்லாத சரவுயிர் இதுகாறும் கண்டதில்லை. கவடி சிப்பி சங்கு முதலிய சிற்சில, சுலபமாய் ஊறுபடாததான கற்கவசங்களையும் சட்டைகளையும் தங்கள் பிழைப்பிற்காகத் தரித்திருப்பினும் அவற்றைத் திறந்து அவைகளின் உண்மையான உடம்பை நோக்கில் வெளிப்பொருளின் தாக்கல் அறியும் மெய்யுறுப்பு தன் தொழில் இயற்ற வீற்றிருப்பதைப் பார்க்கலாம். மெய்யுறுப்பின் விகாரங்களே மற்றப் புலன்கள். வெவ்வேறு விதமாக விசேடத் தாக்குகளை உணர்த்துதலே அவற்றின் தொழில். இப்புலன்களின் கூடுதல் குறைவினால் சரவுயிர் உயர்ந்தவை தாழ்ந்தவை என்று படிப்படியாய் வகுக்கப்படும். மெய்யுறுப்பு மாத்திரம் உடையவை இறுதியான வகுப்பு. ஆதலால் 'புலனுறுப்பும்' அதனால் பிற பொருளின் தாக்கலாதிகளை உணரும் தொழிலும் சரவுயிருக்கு முதல் இலக்கணமாக அமைகின்றன. இப்புலன்மாத்திரத்தால் உணரும் அறிவின் இயல்பு நுண்ணிய சோதனையாலன்றி விளங்குதல் அரிது. தான் பிறர் என்ற வேற்றுமையோடு மனிதர் இயல்பாக உணருகின்ற அறிவிற்கும் இதற்கும் வெகு பேதமுளதென்று மாத்திரம் இவ்விடத்தில் குறிப்பிக்கலாம்.

சரவுயிரின் இரண்டாவது விசேட உறுப்புப் 'புலால்'. மனிதர் முதலிய சகல சரவுயிர்களும் நடத்தல் எடுத்தல் முதலிய தொழில்களைச் செய்வது இவ்வுறுப்பின் உதவியால். இதற்குத் தசை, மாமிசம் என்று பெயர் கூறுவதுண்டு. எலும்பு மச்சை தோல் முதலியனபோல் அல்லாது இது நெகிழ்ந்து பின் சுருங்கும் குணமுடையது. கைகால்களை முடக்கும்போது முழங்கால் முழங்கைகளுக்குமேல் கனத்துத் தோன்றுவது இப் 'புலால்' சுருங்குவதினாலேயே. நெகிழ்ந்து சுருங்கும் இக்குணத்தால் புலாலுறுப்பு தானே இயங்குவதற்குள்ள கருவியாகப் பலிக்கிறது. மெய்யுறுப்பு எப்படி மற்ற ஞானேந்திரியங்களுக்கு ஆதிவடிவமாக இருக்கிறதோ அப்படியே இப்புலால் உறுப்பின் வேறுபாடான இசைப்பினால் சகல கருமேந்திரியங்களும் உண்டா

கின்றன. இப்புலால் உறுப்பு சரவுயிருக்கே உரித்து. பாலை எருக்கு பருத்தி முதலிய தாவரங்களின் காய்கள் காற்றிற் பறக்கவும், இராவணன்புல் என்ற ஒருவகை கடற்கரைப்புல்லின் காய் சகடக்கால்போல உருண்டு மணலில் குதித்தோடவும், சில ஜல தாவரங்களின் காய்கள் ஜலத்திற்சுற்றிச் சுழன்று நீந்தவும், பயறு முதலிய பல காய்கள் தானே வெடித்துத் தம்முள் இருக்கும் தானியங்களை வெகுதூரம் சிதறவும், இப்படி அநேக விசித்திர செய்கைகளுக்கேற்ற யந்திர விசேடங்களைத் தாவரங்கள் உடைத்தாயினும், அவை புலாலுறுப்பாகா. சிப்பி முதலிய சில ஜல ஜந்துக்கள், பாறை கற்கள் முதலியவற்றைப் பற்றிப் போக்குவரவின்றி ஒரு நிலையாய் நின்று தங்கள் வாழ்நாள் முழுதும் கழிக்கும் இயற்கை உடையனவெனினும், அவைகள் இப் புலால் உறுப்பு உடையனவாம். காலக்ஷேப நிமித்தம் சலன சக்தி ஆங்காங்கு மறைவுபட்டிருக்கக் கூடுமேயொழிய, அச்சக்தி இல்லாத சரவுயிர் இல்லை. இதனால் அன்றோ பழுதைப் பாம்பு என்ற ஐயம் உடையோர் மணல் கற்கள் இவற்றை வீசியெறிந்து அவ்வையம் தெளிகின்றார்கள்! சரவுயிர் எனப் பெயர் வந்ததும் இச்சலன சத்தியை முன்னிட்டே. ஆதலால் இப்புலால் உறுப்பும் அதன் தொழிலாகிய சலனமும் சரவுயிருக்கு இரண்டாம் இலக்கணமாக அமைகின்றது. இப்புலால் உறுப்பு மாத்திரத்தால் செய்யும் அகங்காரமற்ற செய்கைக்கும் அகங்காரத்தோடு செய்யும் மனிதர் செய்கைக்கும் உள்ள பேதம், சற்று முன்கூறிய புலன் உணவிற்கும் மனிதருக்கு இயல்பான அறிவிற்கும் உள்ள பேதம் போல, பெரிதென ஞாபகம் பண்ண வேண்டியது. இது ஞாபகம் இருக்கில் கீழ்க்கூறுவன பலவற்றிற்கும் உதவும்.

உஎ. அங்க விபாகமு மவற்றின் றொழிலுங்
கருமுதன் மரணம் வரையுறு கதியுஞ்
சாதியுட் சாதி யாம் வரலாறுந்
தாவரஞ் சரமெனு மிருபா லுயிர்க்குங்
கூறுநூ லுயிர்நூ லெனக்கூ றுவரே.

மேற்கூறிய தாவரம் சரம் எனும் இருவகை உயிர்களையும் குறித்து அறியவேண்டியவை அளவற்றவை. தாவரவகைகளையும் சரவினங்களையும் பிரித்து, அவைகளுக்குப் பொதுவாயும்

விசேடமாயும் உள்ள உறுப்புக்களைக் கூறுபடுத்தி வருணித்து, அவ்வங்கங்கள் வேறு வேறு ஜாதிகளில் வேறு வேறு வடிவங்கள் எடுத்து நிற்கும் கிரமங்களையும் அப்படி எடுக்க நேரிட்ட காரணங்களையும் நிர்ணயித்து அறியவேண்டியது, உயிர்களைப்பற்றிய ஒருவகை ஞானமாக இருக்கின்றது. புஷ்பம் மரப்பொதுவிற்குப் பிரதி யுற்பாதனத்திற்காக அமைந்த ஓர் உறுப்பு. ஆனால் ஒவ்வொரு மரச்சாதியிலும் வெவ்வேறு வடிவம் எடுத்து அது விளங்குகின்றது. தாமரை மலரையும் தென்னம்பூவையும் பார்க்கும்போது எவ்வளவு பேதம் தோற்றுகின்றது? புஷ்பங்களின் வடிவ விசித்திரங்களைக் கணக்கிடல் அரிதே. ஆகிலும் இவ்வடிவ பேதங்களனைத்தும் அவைகளின் உள்ளுறுப்புக்களினுடைய சிற்சில விகற்பங்களால் நேரிட்டவை என அந்த உள்ளுறுப்புக்களைக் கவனித்து நோக்கில் அறியலாம். பூக்களுக்கு அவசியமான உள்ளுறுப்பு ஆண் பெண் உறுப்புக்களாகிய இரண்டுமே. மற்ற இதழ் முதலிய அனைத்தும் துணைக்கருவிகளாக ஏற்பட்டவை. இவற்றின் விகற்பங்களால் பூக்கள் வெவ்வேறு வடிவங்கள் அடைகின்றன. இப்படியே சரவுயிர்கள் பலவற்றிலும் இடப்பெயர்ச்சிக்காக அமைந்திருக்கிற உறுப்புக்களும் நானுவடிவ பேதங்களோடு கூடியவையா யிருக்கின்றன. மீன் செட்டைக்கும் பறவை இறகுக்கும் பல்லியின் அடிக்கும் யானை குதிரை இவற்றின் காலிற்கும் மனிதரின் கை கால்களுக்கும் எவ்வளவு வேற்றுமை? இவ் உறுப்புக்களின் ஆவசியமான அந்தராவயவங்களை முற்கூறியபடி பிரித்துப்பார்க்கில், அவற்றின் ஒற்றுமை வெளிப்படும். இவ்விதமாய்த் தாவர சரமாகிய இரண்டு வகுப்புகளிலும் உள்ள ஜீவராசிகளின் தேக உறுப்புக்களைக் கணக்கிட்டு வர்ணித்தல் உயிர் நூலின் ஒருபாகமாக இருக்கின்றது. இதற்கு 'அங்கவிபாகம்' 'அங்காதிபாதம்' 'அங்கசோதனை' 'உடற்கூறிலக்கணம்' எனப் பல பெயர் கூறுவர். இப்படியே இவ்வுறுப்புக்களின் தொழிலினையும் பொதுவாகவும் ஒவ்வொரு ஜீவ வகுப்பிற்குச் சிறப்பாகவும் ஆராய்ந்து நிச்சயித்தறிதல் உயிர் நூலின் மற்றொரு பாகமாம். முற்கூறிய புஷ்பவுள்ளுறுப்புகள் ஒவ்வோரினத்திலும் மாறுதலடைதலால் உண்டாம் தொழில் வேறுபாடுகளையும், அவ்விதம் வேறுபடுதற்கேற்ற காரணங்களையும், ஆராய்வது மிகவும் இன்பமான விசாரணை. இதுபோலவே ஒவ்வொரு ஜீவராசிகளின் அவயவ வியாபாரங்களும் இப்பாகத்தில் விசாரிக்கப்படும்.

இதற்கு 'அங்க வியாபார நூல்', 'சுகரணவாதம்' 'அங்கஜீவசாத்திரம்' எனப் பெயர். அங்க விபாகத்தையும் அங்கவியாபாரத்தையும் சேர்த்து 'சாரீரசாத்திரம்' எனக் கூறுவதுமுண்டு.

இவ்விரண்டுங் தவிர, சகல ஜீவராசிகளையும் ஜாதி வகுப்புக்களாகப் பிரித்து அவ்வகுப்புக்கள் ஒன்ருெடொன்று படிப்படியாய்ப் பொருந்தும் தன்மையை நிர்ணயிப்பதும் இந்நூலுக்குரிய தொழிலே. சரவுயிர்களைப் பிரதமஜீவி, சக்கரரூபி, சிப்பி வாழ் உயிர், கீடாதி, வீணத்தண்டி என ஐந்து பெரும்பிரிவாக நிறுத்தி, அவற்றுள் வீணத்தண்டிகளை அண்டஜம் சராயுஜம் என இருபெரும் தோற்றங்களாக வகுத்து, சராயுஜங்களைப் பின்னும் நஞ்சுக்கொடியுளது இலது என இருபிரிவாக்கி, முன்னதை மாம்சபுக்கு ஆதியாக ௧0 - ௧௨ குடும்பங்களாகக் கூறிட்டு, மாம்சபுக்குகளைப் பின்னும் மார்ஜாலாதி சுவானுதி என்று இப்படி ௫-௬ யோனிபேதங்களாக வகுத்து, அவற்றுள் சுவானுதியை நாய் நரி நீர்நாய் செந்நாய் மரநாய் என்றிப்படிப் பலவேறு ஜாதிகளாகப் பிரித்து, அவற்றுள் நாய் எனும் ஜாதியைப் பின்னும் பல உட்பிரிவாகப் பங்கிட்டுக் காட்டுதல், உயிர்நூலின் மேற்கூறிய தொழிலுக்கு உதாரணமாகும். இப்படி ஜாதியுட் ஜாதியாக வகுத்தல் அந்த அந்த ஜீவராசிகளின் தன்மைகளை அனுபவ ரீதியாய் நிர்ணயித்து அறிந்து செய்தாலன்றி யாதொரு பயனும் பயப்பதன்று. வெறுங்கை முழமிடுதல்போல் மனக் கணக்கிடுதலால் வெளிப்பொருள்கள் உண்மையை விளக்கா. நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு என்றும், தேவர் பதினறு நூருயிரம், மக்கள் ஒன்பது நூருயிரம், விலங்கும் புள்ளும் நீர்வாழ்வனவும் பப்பத்து நூருயிரம், ஊர்வன பதினெரு நூருயிரம், தாவரம் பதினெட்டு நூருயிரம் என்றிப்படி யோனிபேதம் (அச) நூருயிரம் என்றும் * முன்னோர் கூறியதை உற்று ஆராய்ந்து துணியாமல், கிளிப்பிள்ளைப் பேச்சாய்க் கூவிடல் வறிதே. ஒவ்வொன்றையும் ஆராய்ந்து இப்படி வகுத்தலுமன்று வருத்தம். வகுத்த ஜாதிகளின் சாரீரசாத்திரம் கூறி ஒவ்வொரு ஜாதிக்கும் பிறப்புமுதல் இறப்புவரை நேரிடுகிற விசேடசங்கதிகளைப் பார்த்

* "ஊர்வ பதினென்றும் ஒன்பானு மானுடவர்
நீர்பறவை நாற்காலி நேர்பத்தாம்—சீர்திகழும்
மூவாருர் தாவரங்கண் மும்பத்து மும்மையோர்
ஆவா ரொருப தாரும்"—அமிர்தசாரம்,

தறியவேண்டும். அதுவும் அவ்வளவு அரிதன்று. இவற்றுடன் கூறிய ஜாதிகள் ஒன்றோடொன்று சம்பந்தப்படுதலையும், அவை காலகதியால் அடைந்திருக்கும் வேற்றுமைகளையும், அவைகள் தத்தம் கருப்பத்தில் உறையுங்கால் உண்டாம் மாறுபாடுகளையும், அவைகள் வழங்கும் சுதேசங்களின் தூர சாமீப்பியங்களையும், மற்றும் பல காரணங்களையும் உற்றுணர்ந்து, இவ்வகை ஜீவ ஜாலங்களின் ஜாதி பேதங்கள் உற்பத்தியானதற்குள்ள ஊகங்களை விளக்குவதே இந்நூலில் வருத்தமான பாகம்.

இப்படித் தாவரசரமாகிய சாரீர நியமங்கள் ஜாதி உற்பத்தி ஆதியாகிய பல நுண்ணிய ஆனந்தகரமான விசாரணைகளைச் செய்கின்ற இந்நூல் முதனூல்களில் ஐந்தாவது நூல். இதற்கு 'உயிர்நூல்' எனப் பெயர் கூறலாம். முற்சென்ற தத்துவம் கணிதம் எனும் நூல்களிலிருந்து சிற்சில தனித்தாபிதங்களையும் சத்தி நூலினின்றும் விசேடமாய் இரசாயன நூலினின்றும் பல தனித் தாபிதங்களையும் அனுஷ்டான மார்க்கங்களையும் பெற்றுக்கொண்டு இந்நூல் பிரவிர்த்திக்கின்றது. இந்நூலின் விஷயங்கள் உடம்புகளானபடியால் கேவல விபாவனை மிகவும் சுருங்கும். ஆயினும் ஆடு மாடு புளிமாவென்னத் தன்விஷயங்களை எடுத்துக் கொண்டபோதிலும், கட்டை நெட்டையாதியான அவற்றின் விகற்பங்களை முன்னிடாது அவைகளுக்கின்றியமையாத குணங்களைமாத்திரம் தொகுதியாய் விவகரிப்பதனால் இந்நூல் விஷயங்கள் முற்றிலும் பிண்டமாகா. பொதுநூலிற்கு வேண்டியபடியுள்ள கேவல விபாவனையுண்டு. இக்கூறியவற்றால் இந்நூலை ஐந்தாவதாக நிறுத்திய முறையும் போதரும்.

இந்நூல் ஆதிகாலமுதல் ஆரம்பிக்கப்பட்டிருக்கினும் தூர தேச சஞ்சாரத்தாலும் கால விளம்பனத்தாலும் நேரிடக்கூடிய அனுபவ முதிர்ச்சியாலேயே பூரணப்படத்தக்கது. ஆனதினால் நம்முன்னோர் செய்திருக்கிற மனித சாரீர சாத்திரமும் சிற்சில பொதுவான ஜீவஜால வகுப்பும் ஆகிய இவற்றோடு, பல தேசங்களிலும் துணிவாய் அலைந்து திரிந்து கைப்பொருளும் தேக வருத்தமும் பெரிதாகக் கருதாது உண்மையை விளக்கும் ஒரே நோக்கமாய் ஐரோப்புநாட்டார் உழைத்து அறிந்திருக்கும் அருமையான சங்கதிகளையும் சேர்த்து, அவர்களுடைய ஆராய்ச்சி வழிகளைப் பின்தொடர்ந்து அவர்கள் தற்காலமும் ஓய்வின்றிச்

செய்துவரும் முயற்சிக்கு உதவிசெய்தல் வித்தியானந்தம் விரும்புவோர் கடமை.

## உஅ. தான்பிற ரெனவறி கரண மூளமே.

இப்படிக் கணக்கிடல் அளத்தல் இவற்றிற்கு ஆஸ்பதமாகிய குணமும், இடம்பெயர்ந்து இயங்குதல் புதுப்பொருள்கள் தோன்றும்படி முயங்குதலாகிய சத்தி விசேடங்களும், நிலையில் நின்றும் நிலைபெயர்ந்தும் ஜீவிக்கும் உயிர்ப்பேதங்களும் ஆகிய இவை ஒழிய, வேறெது உலகத்தில் பொதுப்பட நூலாராய்ச்சிக்குத் தக்கதான பொருள் என்று இனி சிந்திக்கவேண்டியது. மானிட சரீரம் எவ்வளவு விசேடமுடையதேனும் முற்கூறிய உயிருள் பொருள்களில் ஒன்றேயல்லாமல் அவற்றில் நின்று வேறுபடுத்தத் தக்கதாயில்லை. சிற்சில உறுப்பு மிக்கும் குறைந்தும் இருப்பது உயிர்வகுப்பிற்கு சகஜமன்றோ? புழுக்களுக்கும் பறவைக்கும் உள்ள வேற்றுமையில் விசேடமா இவ்விஷயத்தில் மனிதனுக்கும் வானரத்திற்கும் உளது. ஞானேந்திரியங்கள் பொதுவாக மக்கள் யாக்கையில் மிகவும் சீர்திருத்தப்பட்டவையாயினும், சிற்சில விஷயங்களில் அவை மற்ற ஜீவராசிகளிற் குறைவை உடையனவே. தன் எஜமானன் சென்றவழி மோந்தறியும் நாயின் மூக்கோ நமது மூக்கோ விசேடம்? நமது கண்ணுக்கெட்டாத தூரத்தில் பறந்து சிறு தவளைகளின் அயர்வறியும் பருந்தின் கண்ணோ அலது நமதோ கூர்மை? இப்படியே கருமேந்திரியங்கள் விஷயத்திலும் தடையற்ற தலைமைக்கு உரிமை பேசுவோமேயானால் சிறு சிலந்தியின் வலையொன்றே அவ்விறுமாப்பிற்குப் போதுமான இடையூறாக முடியும். மூக்கினாலும் இருகாலாலும் சமைக்கப்படும் தூக்கணங்குருவியின் கூண்டிற்குத் தலை கவிழாக் கைத்தொழில் எது? அதியற்புதமாக இக்காலத்தில் ஏற்பட்டிருக்கும் அதிவேகமான ஆவிக்கலன்களையும், புகைவண்டிகளையும் அதிசுலபமாய்ப் பின் தொடர்ந்து உல்லாசமாய் இருபுறமும் உலாவி விளையாடும் சில மீனினங்களும் பறவைகளும் மனிதருடைய கருமேந்திரியோத்கிருஷ்டாபிமானத்தை அறியில் நகையாதென் செயும்? அப்படி அன்று; மானுடயாக்கையானது ஐம்பொறிகளினாலும் கால் கைமுதலிய கரும கருவிகளினாலும், ஒப்பற்ற தலைமை உடையதென நிர்வாதமாகச் சித்திக்கினும், இவற்றுள் யாதொரு விசேட உறுப்புமில்லாது மெய்யுறுப்பும்,

ஆனுமானிகமாக உளதென்று நிர்ணயிக்கப்பட்ட சிறுபுலால் உறுப்பும் மாத்திரமுடைய சிப்பிமுதலியவற்ருேடு, நர்ருக்கு ஏறக்குறைய சமமென நடிக்கும் குரங்கு முதலியவற்றைச்சேர்த்து விட்டு, அற்பபேதத்தினுல் தமது யாக்கையை அவற்றில் நின்றும் பிரித்துப் பெருமை பாராட்டுதல், நியாய நோக்கத்திற்கு நிலை நிற்குமோ? ஆதலால் இக்கூறிய தத்துவம்முதல் உயிர் நூல் வரையுள்ள நூல்களின் விஷயங்களுக்குப் புறம்பாக மற்ற ஒரு பொருளும் இல்லையெனத் தோற்றலாம்.

ஆனுல் அப்படித்தோற்றுதல் ஆறுகடந்த காலை யாவரும் கரையேறினர்களோ என எண்ணி நோக்கிய பத்தாவான் தன்னை மறந்தமைபோலும்! தத்துவாதி உயிர்நூல் பரியந்தம் பொருள் களை விசாரணை பண்ணி அறிந்து நூலேற்படுத்தின கருவி அந் நூல்களில் அகப்பட இல்லையே. ஆதலால் அக்கருவியே அடுத்த நூற்பொருளாக அமைகின்றது. இக்கருவிக்கு மனம் முதலிய பலபெயர் பொருந்துமேனும் அவற்றைச் சிற்சில விசேட அருத் தத்தோடு வழங்குவதுளதாதலில், 'உளம்' எனும் தமிழ்ப்பெயர் ஐயமற்ற பொதுப்பெயராகத்தகும். இதற்கு வாசிட்டம் முதலிய முன்னூல் ஆதாரமும் உளது. 'அகக் கரணம்' 'அந்தக்கரணம்' என்பன இவ்உளம்போற் பொதுவான வேறு மொழிகள். இக் கூறிய 'உளத்திற்கு' இலக்கணம் முன் அறிவினைப் பேரறிவு சிற் றறிவு புலனறிவென வகுக்கும்போது கூறிக்கிடந்தது. தான் பிறர் என்ற துவிதநாட்டத்தோடு அறிவது உளத்தின் தொழில். புலனறிவிற்கும் இதற்கும் உள்ள வேற்றுமை இந்நூலில் உள்ள நுண்ணிய ஆராய்ச்சிகளில் ஒன்ருதலால் இவ்விடத்தில் விவரித் தற்கேற்றதன்று. நம்முடைய உள்ளம் யாதேனும் ஓர் ஆலோ சனையில் மூழ்கிநிற்கும்போது நம்முன் வைத்த அன்ன பானுதி களை வாசனையினுல் உணர்ந்து புசிக்கின்ற நிலைமையைக் கவனிக் கில், நம்முடைய அனுபவத்தில் புலனறிவின் இயற்கை இன்ன தெனவும், அப்புலனறிவால் ஏவப்பட்ட அகங்காரமற்ற புலால் உறுப்பின் செய்கை இன்னதெனவும் வெளிப்படும். அதிபாலிய மான கைக்குழந்தைகளிடத்திலும், மனமோய்ந்து சரமகாலத்தை அடைந்த வயோதிகர்களிடத்திலும் சன்னியாதி வியாதிகளால் அறிவிழந்த சில உரோகிகளிடத்திலும், கூடிய அளவும் சுத்த மாய் அப்புலனறிவும் புலால் தொழிலும் காணலாம். தற் போதம் இழந்து வாசனுமாத்திர சேட்டிதர்களாக நிரந்தரம்

நிருபாதிக சைதன்னிய சாக்ஷாத்காரானுபூதியில் சஞ்சரிக்கின்ற புண்ணிய புருடர்களைத் தெரிசிக்கப் பெற்றோரும் இப்புலன் அறிவின் சுத்த இலக்கணம் அறிவர். அஜகராதி விருத்தியையும் பாலோன்மத்த பைசாசத்தன்மையையும் அத்தத்துவஞானிகளுக்குத் தத்துவநூல்கள் கற்பிப்பதற்கு இதுவே காரணம். இவ்வித உதாரணங்களால் புலனறிவிற்கும், தான் பிறர் என்ற போதத்தோடு கூடி விவகரிக்கின்ற அறிவிற்கும் உள்ள வேற்றுமை பிரகிருதத்தில் ஆவசியப்பட்டமட்டும் விளங்கலாம்.

தான் பிறரென்ற பகுத்தறிவினைக் கூறும்போது அப்பகுத்தறிவோடு செய்யும் அகங்கார கிருத்தியத்திற்கும், புலால் மாத்திரமான நிரகங்காரச் செய்கைக்குமுள்ள பேதமும் முன்னமே குறிப்பிக்கப்பட்டது. நான் செய்தேன், பிறர் செய்தார் என்ற அகங்கார விருத்தி 'தான் பிறரென்ற' துவித அறிவில் கலந்தே நிற்கும். அப்படியே எனக்கு இவ்வின்பம் வேண்டும்: அவனுக்கு இத்துன்பம் வருக: என்றதாதியான இராகத் துவேஷாதி இச்சாவிகற்பங்களும் கலந்தே நிற்கும். ஆதலால் நம் முன்னோர் இச்சாஞானக் கிரியாசத்தி எனப் பிரித்ததுபோலவே, இக்காலத்தில் ஐரோப்பிய நூலோரும் உள்ளத்தின் சத்திகளை வகுத்தாராய்கின்றனர். புலனறிவு தற்போத அறிவோடு கலக்கும் சந்தியில் உண்டாம் விருத்திகளை மனமெனவும், அப்போத வறிவு மிகுந்து தனித்துநிற்கும் விருத்திகளைப் புத்தியெனவும், இப்படி அறிதலால் உண்டான இன்ப துன்பங்கள்மயமாய் எழும்பும் விருத்திகளைச் சித்தம் எனவும், அதனால் இயக்கப்பட்டு நான் எனத் தடித்து வெளிப்படும் விருத்திகளை அகங்காரம் எனவும் பிரித்து, உளத்தை 'அந்தக்கரண சதுஷ்டயம்' என விவகரித்தல் இந்நாட்டில் பொதுவான வழக்கம். மனுஷதத்துவத்தை அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் எனப் பஞ்ச கோசங்களாக்கி, அவற்றுள் முன்னவை இரண்டையும் ஜடப் பொருள்கள் ஆதலால் உயிர்நூல் விஷயங்களாகத்தள்ளி, பின்னவை மூன்றையும் இந்நூலில் விசாரிப்பது நம் முன்னோர் கொள்கை. இக்கோச விசாரணைக்கு அடுத்ததுபோல சில அபிப்பிராயங்கள் இக்காலத்தில் ஐரோப்பு நூலோரிற் சிலர் வெளியிடுகின்றார்கள். இக்கூறிய அந்தக்கரண பரிணாமங்கள், ஜாக்கிர சொற்பன சுழுப்தியாகிய மூன்று அவஸ்தைகளிலும் மாறுபடும் இயற்கைகளையும் இந்நாட்டுநூலோர் சாதாரணமாய்ச் சோதனை

செய்வதுண்டு. ஆனால் ஐரோப்புவாசிகளில் அநேகர் இம்மூன் றவஸ்தைகளுமே உளவோ இலவோ எனச் சந்தேகித்துத் தாங்கள் இந்நூலாராய்ச்சிக்குப் புதிதென்பதை வெளிப்படுத்து கின்றார்கள். அப்படியே புலனறிவே போத அறிவென்று சிலரும், புலனறிவும் போதஅறிவும் ஆகிய எல்லாம் பிராண விகாரங்களே எனப் பிறரும் கூறி, தன் தாய் மலடி எனச் சாதிக்கின்றாரு முளர். இவ்வாதங்களின் இயற்கையையாவது அவற்றின் நிவிர்த்திக்கேற்ற சோதனைகளையாவது சூசிப்பிக்கவும் இது தருணமன்று.

## ௨௯. உளநூ றத்துவ நூலோ டொன்றும்.

மேற்கூறிய அந்தக்கரண விகற்பங்களைச் சோதனைசெய்து உள்ளபடி விளக்கும் நூலிற்கு 'உளநூல்' என்று பெயர். பொது நூல் இனத்தில் இஃது இறுதியான நூல். தன்பண்டங்களைக் கணக் கிட்டு விலைமதிக்க வேண்டிய வியாபாரி, அவைகளை நிறுத்தல் நீட்டல் முகத்தல் முதலிய அளவு சாதனங்களால் அளந்து நிச்சயம்பண்ணி, பின் அவ் அளவுசாதனங்களையும் விலை மதித்தல் போல, மற்ற நூலாராய்ச்சியனைத்திற்கும் கருவியாய் நின்ற உளத்தையே, அவ்வாராய்ச்சியின் முடிவில் அகமுகமாய்த் திரும்பி நோக்கி அதன் இயற்கை விசாரணை பண்ணப்படுகின்றபடியால் இந்நூல் கணிதாதி பகிர்முக நூலுக்குப் பின்வைக்கப்பட்டது. அன்றியும் கணிதாதி நூலின் முடிவுகளும், விசேடமாய் உயிர் நூலின் துணிபுகளும் இந்நூற்குப் பெரிய உதவிசெய்கின்றன. ஆயினும் இந்நூல் கணிதாதி நூலோடு அனுஷ்டான மார்க்கங் களில் நெருங்கிய பொருத்தமுள்ளதன்று. பலதடவை குறிப் பிட்டபடி அவைக்கு வெளிமுகப்பார்வையும் இந்நூற்கு அகமுகப் பார்வையும் வேண்டியதாயும் இருக்கின்றது. இவ்விரண்டுமுகப் பார்வையும் ஒரு சமயமே அமைவதரிது. "யாழ்ப்பாணத்துக் கப்பலோட்டம்போல" * ஒரு கரை மறையும்போதே மறுகரை தோன்றும். அவை † காகத்தின் கண்போலவென்று நம்முன்

* குமாரதேவர்.

† "கருங்கொடி யிருவிழிக் கண்ணுமோர் மணி
திரிந்திடு செயலெனத் திரித லின்றியே
பொருந்துறு மகமொடு புறமுந் தீர்வற
விருந்தில குறுமரு ளிட்ட லிங்கமே"—பிரபுலிங்கலீலை.

ஞேரில் சிலர் கூறுவதும் இதனுலேயே. மற்றைப் பொது நூலோடு இந்நூல் நெருங்கிய பொருத்தமுடையதெனப் பார்க்கில், தத்துவ நூலிற்கும் இதற்கும் அநுஷ்டான மார்க்கத்தாலும் விஷய ஒற்றுமையாலும் மிகவும் சாமீப்பியம் உளதென விளங்கும். இரண்டும் அகமுகத்தால் சாத்தியம். இரண்டும் மற்ற நூல்களுக்கு வேறுபட்டு நிற்கும். இருக்குகை விளங்குகை உணர்த்தும் தத்துவநூல், இருக்குகையும் விளங்குகையும் ஒன்றுபட்டுப் பிரத்தியக்ஷமாய்க் கிடக்கும் உளநூல் விஷயமாகிய அந்தக் கரணத்தை விசேடமாய் ஆராய்வதற்குக் கடமை உடையது. அன்றியும் தோற்றும்படியான சகலதிருசிய பதார்த்தங்களுடைய பொதுவான இருக்குகை, அவை தோற்றுகின்ற உளமாகிய ஆடியிலன்றிச் சுருக்கமாய் அறிவதற்கு இடமுமில்லை. வழக்கத்திலும், இந்நூலைத் தத்துவநூலில் நின்றும் முற்றிலும் பிரித்துவிவகரிக்க வருந்தி முயல்கின்ற ஐரோப்புத்தேச வித்துவான்களுடைய நூல்களிலும் அவை பிரிபடாது ஆங்காங்குக் கலப்புண்டிருப்பதைப் பார்க்கலாம். நம் முன்ஞேர் நூலில் இவை இரண்டும் முற்றும் பிரிபடாமலே ஏகமாய்க் கலந்து நிற்கின்றன. ஆனதினுல் இந்நூல் தத்துவநூலில் சென்று கலப்பது இயல்பே. சமுத்திர நீரானது கண்ணுக்குப் புலப்படாத ஆவியாய் மறைந்து, பின்னீடு மேகமாய்ச் சிறிதுசிறிது தடித்து மழையாய்ப் புலப்பட்டு, ஆங்காங்கு சம்பந்தமற்ற ஓடை வாய்க்கால்களாகப் புறப்பட்டு, ஆறுக உருக்கொண்டு விரிந்து, சமுத்திரத்தோடு கலக்கும் சங்கமதிசையில், இது யாறு இது கடல் எனத் தோன்ருவாறு, தத்துவ நூலோ டாரம்பித்துச் சாதாரண மனதிற் கெட்டாத கேவல விபாவனைகளாகிய கால தேசங்களை ஆராயப்புகுந்து, சிறிது சிறிதாகப் பிண்ட விவகாரம் அதிகரித்து, முற்றும் பிண்டமே எனத்தோற்றத்தக்க உயிர்நூல்வரை அவ்வாராய்ச்சி வளர்ந்து உளநூல் என்ன விரியும்போது, ஆரம்பித்த தத்துவ நூலிற்கும் இதற்கும் உள்ள வேற்றுமை மறைவுபடுகின்றது. இவ்விதம் முதனூல்கள் தம்முள் ஒரு மண்டலப்படுவது ஞாபகம் பண்ணத்தக்கது.

இந்நூலில் நம்முன்ஞேர் மிகவும் தேர்ச்சியுடையோர் என்பது கூறியவற்ருல் போதரும். ஆயினும் பற்பல இந்திரிய சோதனைகளும் அருமையான அகக்கரண பரிணும விசாரணைகளும் விசேடமாய்ப் பழக்கமென்று சொல்லுகிற வாசனு நியம

விதிகளும் ஐரோப்பிய மகான்கள் செய்திருக்கின்ற நூல்களில் மிகவும் விரிந்துகிடப்பதினல் அவற்றையும் நன்ருய் ஆராய்ந்து இந்நாட்டு அபிப்பிராயங்களோடு கலத்தல் பெரும்பயன்விளைக்கும்.

௩௦. முதனூல் பலவின் பொதுவிதி யொழுங்காய்ச்
சிறப்பிற் சிற்பொருட் கேற்புடைத் தாக்கி
யொருவழிப் படுத்தல் வழிநூன் மாண்பே.

இதுகாறும் பொதுநூலில் 'முதனூல்' இலக்கணம் கூறப்பட்டது. முதனூல் ஆறிலும் உட்படாத விஷயம் இல்லை. ஆனல் நூலிலக்கணத்தைப் பூரணமாக விளக்குபவையாதலால், அவற்றுள் எடுக்கப்பட்ட விஷயங்களைப் பொதுப்படக்கேவல விபாவனையாய் உண்மை விளக்குவது மாத்திரமே கருதி, நிஷ்பக்ஷபாதமாய் ஆராய்ந்து நியமங்களை ஏற்படுத்துவதன்றிச் சிறப்பாகச் சில பொருள்களை மாத்திரம் விவரிக்க இடமில்லை. பற்பல காரணங்களால் பல பொருட்டொகுதிகளை அப்படி ஆராய்வது வித்தியானந்தத்திற்கும் விஷய நிச்சயத்திற்கும் உபயோகப்படுவதினல் அவ்வித ஆராய்ச்சி எங்கும் வழங்கிவருகின்றது. அப்படி ஆராயும்போது எந்த எந்த முதனூல்களோடு எடுத்துக்கொண்ட பொருள்கள் சம்பந்தப்படுமோ, அம்முதனூல் முடிபுகளை ஒன்ருய்ப் புணர்த்தி, கூடிய அளவும் நூல் இலக்கணங்களுக்கு ஏற்ற பொதுமையும் கேவல விபாவனையும் ஒழுங்கும் வருவித்து, விசேட விதிகளை ஏற்படுத்தி அப்பொருட்டொகுதியைப் பற்றி அறியத்தக்கவை யாவையும் திரட்டித் தருவது 'வழிநூலின்' தலைமையான குணம். இவ்வழிநூலின் இலக்கணம் கீழ் வரும் உதாரணங்களால் இன்னும் வெளியாம் :

௩௧. சோதிடம் பௌமியந் தொல்வியா கரண
மெனவழி நூற்குதா ரணம்பல வுளவே.

வானில்தோன்றும் நக்ஷத்திரம் கிரகம் சூரியசந்திரர் தூமகேது ஆகிய இவை யார்க்கும் வியப்புண்டுபண்ணும் பதார்த்தங்களாக இருக்கின்றன. இவை என்னவென்றும் இவை செய்யும் தொழில் என்னவென்றும் மற்றும் அறிய மனிதர் ஆதிகாலம் முதல் முயலுவதுண்டு. அவைகள் பூமியில் நாம் காண்கிற மற்றப் பொருள்போல ஒன்றும் அன்று என எதுகாறும் நினைக்கின்றேமோ, அதுவரையும் அவைகளைப் புறம்பாக நிறுத்தி

அவைகளின் குணங்களை ஆராயும் நூலையும் ஒரு முதனூலாக அங்கீகரிக்க வேண்டியதாம். ஆனால் வாஸ்தவத்தில் அவைகள் பூமிபோல பௌதிக கோளங்களாகவே இருக்கின்றன. அவைகள் நாம் பூமியில் காணும்படியான இரும்பு பொன் முதலிய பூதங்களின் சேர்க்கையே என்பதற்கு நிராகரிக்கத் தகாத அநுமானங்களுண்டு. தானே பிரகாசிக்கும்படியான நக்ஷத்திரங்களிலும் சூரியனிலும், இப்பூத பௌதிகங்கள் அவஸ்தா பேதத்தை அடைந்து எப்போதும் வாயு வடிவமாக நிற்கின்றன. சுயம்பிரகாசிகளாகிய நக்ஷத்திரங்களும் சூரியனும் பெரு நெருப்புகளன்றி வேறல்ல. கிரஹங்கள் இவ்வளவு பேதமேனும் உள்ளவை அன்று. சகல விஷயங்களிலும் பூமியைப்போலவே இருக்கின்றன. சந்திரனும் அப்படியே. இவ் வான்பொருள்களின் இடப்பெயர்ச்சியும் இயக்க விதிகளுக்குப் புறம்பன்று. ஆயினும் அவைகளை இயக்கும் சக்திகள் சுத்தமாயும் சிலவாயும் இருப்பதினால் அவற்றின் கதிகளைத் திட்டமாய்க் கணித்து முன்னதாய் அறிவிக்கக்கூடியதாய் இருக்கின்றது. ஆனதினால் கணிதம் இயக்கம் இரசாயனம் என்ற மூன்று பொது நூலையும் தலைமையாய் முன்னதையும் அநுசரித்து, இச்சோதிகளை ஆராய்ந்து அவற்றைப்பற்றி அறியவேண்டியவை அனைத்தையும் ஒருமுகமாய்த் திரட்டிக் கொடுக்கும் சோதிட நூல், 'வழி நூல்' இயல்பிற்குப் பிரபலமான உதாரணமாக இருக்கின்றது. காலதேசமென்னும் தத்துவங்களின் பெருமையையும் நமது சிறுமையையும் விளக்கி, மனவிரிவை உண்டு பண்ணி ஆநந்தம் அளித்தற்கு, இக்கெம்பீர வழி நூல்போல வேறு நூல் இல்லை. இந்நாட்டிலுள்ள இக்கால சோதிட நூலோரில் பெரும்பான்மையர் சூரிய சந்திரர் இருவரை ஒழிய மற்ற வான்பொருள்களைப் பஞ்சாங்கத்தன்றி அறியாதிருக்கும்படி நேரிட்டிருக்கிற நமது தேசநிலைமை மிகவும் விசனகரமானதாக இருக்கின்றது.

பூமியின் பூர்வகால ஸ்திதிகளையும் அஃது இவ்வித நிலைமைக்கு வருவதற்குள்ள காரணங்களையும் அது தற்காலம் கடல் மலையாதியாக நிற்கும் வெவ்வேறு தேச வேறுபாடுகளையும் குறித்து ஆராய்ந்து ஒருவழிப்படுத்தும் வழி நூலிற்கு 'பௌமியம்' 'பூமிசாஸ்திரம்' என்று பெயர். இதில் பூமியின் புராதன நிலைமைகளை ஆராய்தலே மிகவும் அருமையான பாகம்.

வியாகரணமும் ஒரு 'வழிநூலே' யாம். இது முன்னவை போல அல்லாமல் உளநூலாகிய முதனூலோடு சம்பந்தப்படுகின்றது. வாக்கும் அருத்தமும் ஒன்றுபட்டே நிற்கும். அருத்தம் என்பது மனோவிருத்தி. வாக்கு மனோவிருத்தியைக் காட்டும் ஒரு குறி. பற்பல தேசத்தார் தங்கள் கருத்தை வெளியிடப் பற்பல குறிகளை ஏற்படுத்தி இருக்கின்றார்கள். அக்குறிகளின் சேர்க்கை பாஷை எனப்படும். ஒவ்வொரு பாஷையிலும் வழங்கும் வாக்குக்களை வகுத்து அவைகள் உபயோகப்படும் முறையையும், அர்த்த பேதத்தை விளக்க மாறுபடும் கிரமத்தையும் சொல்வது 'வியாகரணத்தின்' தொழில். ஒவ்வொரு பாஷையையும் தனிப்பட எடாமல் பொதுவாகப் பற்பல பாஷைகளுக்குள்ள சம்பந்தங்களையும், உற்பத்திகளையும் ஆராய்வது வியாகரணத்தின் விசேடத் தொழில். வடமொழி வியாகரணமும் தென்மொழி இலக்கணமும் தனித்தனி ஒவ்வொரு பாஷையை மாத்திரம் கவனிக்கின்றன. பொதுவாகப் பாடைகளின் உற்பத்தி முதலியவற்றை ஆராய்தல் ஐரோப்பிலும் நூதனமாக ஏற்பட்டதுவே. இது மிகவும் அறிவை விளைப்பதற்கேற்ற வழிநூலாக இச்சிறு காலப் பயிற்சியாலேயே விளங்குகிறது.

இப்படிச் சிறப்பாக ஆராயக்கூடிய பொருட் டொகுதிகளுக்கு அளவில்லாததினால் வழிநூல்களைக் கணக்கிட்டு வகுத்தல் பயனுடையதன்று.

### ௬௨. முதல்வழி நூற்களின் முடிபுணர்ந் தவையுடன்
### கைவரும் வகையொரு செய்வினைக் கமைத்துத்
### துணைசெயல் சார்புநூற் ருெழிலென மொழிப.

முதனூல் வழிநூல் ஆகிய இரண்டும் நிஷ்காமியமாய் உண்மையை மாத்திரம் விளக்கவேண்டுமென்ற ஒரே கருத்துடையன. உண்மையை அறிதல் போதுமான ஆனந்தம் தருவதேனும், அவ் ஆனந்தம் தக்கோர்க்கன்றி யாவர்க்கும் அனுபவிக்கக் கூடியதன்ருயும், மனிதர்களுடைய சுகவாழ்விற்குப் பற்பல சௌகரியங்கள் ஆவசியப்பட்டனவாயும் இருப்பதால், முன் சென்ற இருவகை நூற்களின் முடிவுகளைத் திரட்டி அவை மனிதர் செய்து வரும் யாதேனும் ஒருவகைத்தொழிலுக்கு உபயோகப்படும்படியாக அமைத்து, காரணகாரிய விசாரங்களை ஒழித்து, உடன்

அனுஷ்டிக்கத் தக்கதான விதி விலக்கு வாக்கியங்களாக ஏற்படுத்தி, பயன்படும் ஒன்றையே கருதிப் பிரவர்த்திக்கும் நூல்களும் உள. அவற்றிற்குச் 'சார்பு நூல்' என்று பெயர். மேற்கூறியவற்ருல் நூல் இலக்கணங்கள் இவற்றுள் பூரணமாய் அமைவதற்கு இடமில்லை என்பது தானே விளங்கலாம். பொது நூல்களுள் கடையாய் நிறுத்திய முறையும் அதனாலேயே போதரும்.

௩௩. தருக்கந் தருமஞ் சிற்ப நாவிகந்
தனுராயு ளாதியாச் சார்பு நூல் பலவே.

வழிநூல் போலவே சார்புநூற்கும் ஆராய்வோர் கருத்தின் அளவேயன்றி வேறு வரையறையில்லை. ஆயினும் இவற்றுள் நூல் இலக்கணத்தை மிகவும் தழுவி முதனூல்போல் விரிவுடையதாய் நிற்பன சில உள. அவற்றுள் 'தருக்க சாத்திரம்' தலைமையாய் இருக்கின்றது. உண்மையை அறிவது எல்லா நூற்கும் தொழில். உண்மை என்பது இன்னதென நிச்சயிக்கும் தத்துவ நூலோடு பொருத்தம் உடையதாகி அப்படி நிச்சயிக்கப்பட்ட உண்மையை ஆராயும் மார்க்கங்களை நிர்ணயித்து அம்மார்க்கங்களுக்கேற்ற விதி விலக்குகளை உடன் உபயோகப்படும் விதமாகக் கூறுவது தருக்கநூலின் தொழில். நூல் ஆராய்ச்சியே தன் விஷயமாகக் கொண்டமையால் சார்பு நூல்களுக்குத் தலைமையாய் ஏறக்குறைய முதனூல் வழிநூல்களுக்குச் சமமான நூற்சிறப்புடைத்தாய் இது நிற்கின்ற தன்மை வெளிப்படும். இவ்விதம் உண்மையை விளக்கும் மார்க்கங்களை ஆராயும் பொருட்டு ஏற்பட்ட இப்பொது நூலின் கருத்துள்ளவாறுணராது, இக்காலத்தியரில் சிலர், தான் பிடித்த முயலுக்கு மூன்று காலென்று சாதித்தற்குள்ள கருவி என மயங்கி, இருக்கிறபடி பொருளியல்பை எட்டிப்பாராது, வெறும் வாய்மென்று கடபடமெனக் கூச்சலிட்டுச் * "சலமின்றிச் சந்துரைப்பர் தர்க்கர்" எனும் அவமதிப்பிற்கு இவ் அருநூலை ஆளாக்கினர். நெடுங்காலமாய் நேர்ந்த பராமுகத்தால் ஏறிய இவ்விதமான சிலந்திவலைகளின் சிக்கறுத்துச் சீர்திருத்தப்படின், பொருள்களின் உண்மையை நிர்ணயிக்கும் வழிகளை எடுத்துக்காட்டும் இந்நூல் உலகியற்கையிலும் நூல் விசாரணையிலும் பேருதவி செய்யாநிற்கும்.

* ஒழிவிலொடுக்கம்,

இப்படியே 'தருமசாஸ்திரமும்' இந்நாட்டில் சார்யோய்ந்த மரமாக நிற்கின்றது. மிகவும் கெம்பீரமான இச்சார்புநூற்கு மனிதர் செய்யும் சகல வினைகளும் எதின்பொருட்டு என ஆராய்தலே தொழில். ஆதலால் புருடார்த்தமே இந்நூலின் விஷயம். பொதுமையிலும் கேவல விபாவனையிலும் இதனிலும் சிறந்த சார்புநூல் இல்லை. நன்மையை அடைதலும் தீமையில் நீங்கலும் புருடர் யார்க்கும் பொதுவான விருப்பம். நன்மைதீமை எவை என்ன ஆராய்தலே இந்நூலின் ஆரம்பம். இவ்வாராய்ச்சி தத்துவநூல் உளநூல் என்னும் இரண்டோடும் கலப்புண்டு நிற்கும். நன்மை தீமைகளை நிர்ணயம் பண்ணிக்கொண்டு அவற்றுள் முன்னதை அடையவும் பின்னதை விலக்கவும் வேண்டிய மார்க்கங்கள் விதி விலக்கு வாக்கியங்களாக ஏற்படுத்தப்படும். தரும நூலும் மதநூலும் மிகவும் ஒற்றுமை யுடையன. நமது நாட்டில் இவை இரண்டும் பிரிவுபட்டதேயில்லை. எல்லா மனிதருக்கும் பொதுவான புண்ணிய பாவங்களை நிச்சயித்து அவைக்கேற்ற ஆசாரானுஷ்டானங்களை விதிப்பதே நூலொழுங்குப்படி தருமசாஸ்திரத்திற்குரிய தொழிலாயினும், மதச்சார்பால் குற்றம் வருவதன்று. கும்பம் வைத்தல், கோலமிடுதல் என்றிப்படி எண்ணற்ற சடங்குகளாகிய புல்லூரியால் மூடப்பட்டுத் தரும விதிகளின் உத்தேசம் மறைவதே இத்தருவிற்குப் பராமுகத்தால் எந்நாட்டிலும் நேரிடும் உபாதி.

தருக்கம், தருமம், இரண்டும் விசேடச் சார்புநூல்கள். மற்றவை இவைபோல் விரிவும் பெருமையும் உடையவை அல்ல. மனிதர்கள் செய்யும் எத்தொழிலுக்கும் நூலறிவு உபயோகப் படக்கூடியதே. தங்கள் சௌகரியத்திற்காக வீடுகளைக் கட்டுவது மக்கள் யார்க்கும் பொதுவான தொழில். அப்படி வீடு கட்டுவதற்கேற்ற பொருள்களையும், அவைகளின் வலிமை வலியின்மைகளையும், உபயோகப்படுத்தவேண்டும் வழிகளையும் ஆராய்ந்து விதிக்கும் 'சிற்பநூலானது' சார்புநூல்களில் எங்கும் பரவிய ஒரு நூலாம். இஃது கணிதம் சத்தி என்ற இரண்டு முதனூலில் சம்பந்தப்படும். பாதைகளைத் திருத்துவது, பாதைச் செருப்புகளாக நேரிடுகின்ற ஆற்றைக் கடப்பதற்காகப் பாலங்களைக் கட்டுவது, சஞ்சார சௌகரியத்திற்காவது விவசாயாபிவிருத்திக்காவது வேண்டி வாய்க்கால் முதலிய நீர்நிலைகளை வெட்டுவது

ஆதியாக, இன்னவன்ன பல தொழில்களுக்கும் சிற்பநூலின் உதவி தேவைப்படும்.

முதனூலில் நின்றும், அன்றி, வழிநூலில் நின்றும் புறப் படும் சார்புநூலும் உண்டு. கடல் யாத்திரை பண்ணுவதற்குள்ள மார்க்கங்களை விளக்கும் 'நாவீகம்' என்னும் நூலானது தலைமை யாய்ச் சோதிட வழிநூலின் ஆதாரத்தால் பிரவர்த்திக்கின்றது. திசைகளையும் தேச நிலைமைகளையும் தூர சமீபங்களையும் நக்ஷத் திராதி வான்பொருள்களின் ஸ்திதிகளால் உணர்ந்து கொள்ளு வது சமுத்திரயானத்திற்கு ஆவசியம். இவற்றோடு மழை காற்று இவற்றின் வரவு போக்குக்களையும் அவற்றைக்குறித்த வழி நூலில் நின்றும் எடுத்துக்காட்டிக் கப்பலோட்டிகளுக்குத் துணை செய்வது 'நாவீக' சார்புநூலின் பயன்.

நல்வினைபோலவே தீவினைக்கும் நூலுணர்வு உதவி செய்ய லாம். அரசர் ஒருவரோடொருவர் எதிர்த்துப் போர்செய்தல் இனியும் பலகாலம் வழங்கக்கூடிய மனிதர் அகிருத்தியத்தில் ஒன்றாக இருக்கின்றது. அந்தத் தொழில் நிலைநிற்குமட்டும், அதற்கியன்றபடி நூலுணர்வு உபயோகப்படவே செய்யும். வாள் முதலிய சஸ்திரப் பிரயோகத்தையும் அம்பு குண்டு முதலிய அஸ்திரப் பிரயோகத்தையும் சேனைகள் படைக்கலங்கள் இவற்றைச் செலுத்து முறையையும்பற்றி, கணிதம் சத்தி இர சாயனம் என்னும் முதனூலில் நின்று பிறக்கும் அறிவுகளைத் திரட்டி, மனிதர் ஒருவரை ஒருவர் சுலபமாய்க் கொல்லும் உபா யத்தைத் தெரிவித்து உதவிசெய்வது 'தனுர்வேதம்' என்ற பழைய பெயர்பெற்ற சார்புநூலின் தொழில்.

இத்தனுர்வேதத்திற்கும் மரணோன்முகமாய் நிற்கின்ற வரைப் பிழைப்பிக்கும் ஆயுள்வேதத்திற்கும் இவ்விஷயத்தில் எவ்வளவு வேற்றுமை! இரசாயன நூலும் பிரதானமாய் உயிர் நூலும் இச்சிறந்த சார்புநூலுக்கு ஆதாரமாம் பெருமையை உடையன. மனிதரின் அங்கவிபாகத்தையும் அங்கவியாபாரத் தையும் நன்றாய் ஆராய்ந்து, அங்கவிபாகத்தின் நிலைபெயர்ச்சி யாலோ வியாபார விகற்பங்களாலோ நேரிடுகின்ற நோய்களை நிச்சயித்து, அவற்றின் அறிகுறிகளைக்கூறும் உரோக நிதானமும், இயற்பொருள் தாவரப்பொருள் சிற்சில சரஉயிர்ப்பொருள் ஆகிய இவைகள், அந்நோய்களை மாற்றும் வழிகளை அனுபவரீதி யாய் நிர்ணயிக்கும் குணபாடமும், அவைகளை மருந்து

களாக்கும் முறைகளைக் கூறும் வாகடமும் என்ற பல அங்கங்களோடு கூடிய இப்பெரிய வைத்திய நூல் 'ஆயுள்வேதம்' என்னும் பெயரும் பெயருக்கு முற்றிலும் தக்கபடியான யோக்கியதையும் உடையதாகவே இருக்கிறது.

இப்படியாகத் தத்துவ நூலாதியான முதனூலிலும் சோதிடாதி வழிநூலிலும் நின்று பிறந்து, மனிதருடைய நன்மை தீமையான தொழில்களுக்கு உதவிசெய்கின்ற சார்பு நூல்களைக் கணக்கிடல் அரிதன்றாயினும் பயனுடையதன்று. பொதுவாக அவைகளின் இலக்கணம், காரியசாத்தியமாகிய தன் கருத்திற்கு இசைந்ததாய் இருப்பதைமாத்திரம் கவனிக்கத்தக்கது. உண்மையை விளக்கவந்த முதனூல்வழிநூல்கள்போல காரிய காரண விசாரணைகளை விரிவாகச் செய்யாமல் அவற்றை மனதில் அடக்கிக்கொண்டு, தான் துணைசெய்யப் புறப்பட்ட வினைகட்கேற்ற நூலுணர்வினைக் கரதலாமலகமாகத்திரட்டி விதி விலக்கு வடிவாக எற்படுத்தி அவ்வினைஞரைக் கைதூக்கிவிடுதலே சார்பு நூல் முறைமை.

௩௪. வாசனை வைபவங் கலையா மதுவும்
பொதுவுடன் யோகமென் றிருகூ றுகு
நற்கலை விகற்ப நணுகா வழியே.

இதுகாறும் மக்களின் இயற்கையறிவால் அறியக்கூடிய பொது நூல்களின் இலக்கணம் நிரூபிக்கப்பட்டது. இரண்டற வுணரும் நிருபாதிக ஞானமாகிய பேரறிவினின்றும் பிரிக்கும்படி இவ்வியற்கை அறிவைச் 'சிற்றறிவெனத்' தாழ்த்தியும் சரவுயிரின் இலக்கண சோதனையில் வெளிப்பட்ட புலனறிவினின்றும் பிரிப்பதற்குத் 'தற்போதவறிவு' அல்லது 'போதவறிவு' என அதனையே உயர்த்தியும் கூறப்பட்டது. மற்றச் சரவுயிர்போல் மனிதனும் புலன் புலால் என்ற புறக்கரணமுடையோனாதலால் அவனிடத்தும் புலனறிவும் புலாற்செய்கையும் இராதொழியா. தனித்து நிற்கக் காண்பதரிதெனினும் சற்றே கூர்ந்து சோதிக்கில் அவற்றின் அனுபவம் அகப்படும். மின்னல் முதலியவற்றின் அதி ஜோதியினால் கண் தானாய் மூடிக்கொள்ளுவதும், துரும்பு கல் முதலிய வேற்றுப்பொருள்களை அன்னபானாதிகளினின்றும் நா தானே அலைந்து திரிந்து கண்டறிந்து வெளிப்படுத்துவதும்,

கந்தபேதங்களால் நாசி தானே குவிதல் விரிதல் முதலிய விகார மடைவதும் ஆதியான இன்னவன்ன அனுபவங்களில் புலனறிவின் ஆதிக்கம் விளங்கும். கண்ணில் மருந்தோ மையோ எழுதுவோர், கண்ணின் புலனறிவால் ஏவப்பெற்ற கண்ணிமைகளோடு எவ்வளவு போராடித் தங்கள் உத்தேசத்தை நிறைவேற்றுகின்றனர்? தமது போதவறிவிற்கும் தாம் மனதாரச் செய்யும் செய்கைக்கும் அந்நியமாக வேறு அறிவுந் தொழிலுந் தம்மிடத்தில்லையேல் இப் போராட்டம் வந்தவாறென்னை? இப்படியே நாம் ஓயாது கண்ணிமை கொட்டலும், கண்ணீர் சுரத்தலை உணர்ந்த அவ்விமையின் ஸ்பரிச உணர்வால் ஏவப்பட்ட ஒரு தொழிலே. இவ்விதமான ஸ்பரிச உணர்வன்றோ அதிபாலியமான கைக்குழந்தைகளின் வாயிதழிற்பட்ட கைவிரல் முதலியவற்றை மென்று சுவைக்கும்படி அவ்விதழ்களை இயக்குவது? காடநித்திரை பண்ணுவோனது கைகால்களைக் கிள்ளில் அந்த அந்த உறுப்புக்கள் மாத்திரம் பின்னிழுத் தியங்குவதற்குத் தத்தம் ஊறுணர்வன்றி வேறுணர்வேது? இப்படி மனிதரின் பற்பல அவஸ்தைகளில் தனித்தும் பொதுவாய் மற்றவேளைகளில் அவர்கள் போதவுணர்வோடு கலந்தும் புலனறிவானது நிற்கின்றதென்பது, தத்துவசோதனை செய்தோர் யார்க்கும் சம்மதம். இப்படி நமக் கியற்கையாயுள்ள தற்போத அறிவோடுகூடிய உள்ளமானது 'புலனறிவிற்கும்' இரண்டற அறியும் 'பேரறிவிற்கும்' நடுவேநிற்கும் தன்மையை யுணர்த்துதற்காகவே நமது முன்னோர் * உள்ளத்தை ஜடாஜடப் பொருளாக வருணிக்கின்றனர். உள்ளத்தின் இவ்விசேட நடுநிலைமையால் ஆங்கிலேய நூலோருள் பற்பல விவாதங்கள் நேருவதுண்டு. அவற்றைச் சோதித்து ஒருவாறு துணிதற்குப் பிரகிருதத்தில் ஆவசியகமில்லை யெனினும் ஒன்றிரண்டு சங்கதிகளைச் சூசிப்பித்தல் முற்கூறியவற்றை விளக்கி மேற்கூறுபவைக்கு உபகாரப்படும். மனிதருக்குள் தோன்றும் புலனறிவைப் படிப்படியாய் வகுத்து அது போதஅறிவோடு புணரும் சந்தி

---

* "சத்தினசத்தி னிடைநின்று சைதந்நியத்திற் சாட்டியத்தி
லொத்தூசடுமின் றலைவதுவே யுள்ளமாகு மிவ்வுள்ளஞ்
சித்தின்முயல்வாற் சித்தாகுஞ் செடத்தின்முயல்வாற் செடமாகும்."

—வாசிட்டம்.

இக்கவியே ௬௬-ம் பக்கத்துள்ள உள்ளத்தின் பிரயோகத்தையும் காட்டும்.

களைக் குறிப்பித்தல் ஒரு வழக்கம். அப்படி வகுக்கும்போது, ஆமாசய பக்குவாசய இயக்கங்கள்போலப் போதசம்பந்தமின்றி நடந்தேறுபவைகளை மிகவும் தாழ்ந்தபடியாகவும், கண்ணிமை கொட்டல் போன்ற சில சற்றே தற்போதவறிவைத் தூண்டி எழுப்பிவிடலால் அவற்றை உயர்ந்தபடியாகவும் நிறுத்திச் சோபானக்கிரமமாகப் பார்க்குங்கால், எக்கணம் பகல் நீங்கிற்றென்றும், எக்கணம் இரா தோற்றிற்றென்றும் கணக்கிட ஏலாதவாறு ஒன்ருேடொன்று போதவறிவு வரையும் மிகவும் ஒற்றுமைப்பட்டு நிற்றலால் சிலர் போதவறிவும் புலனறிவின் விகாரமேயென மயங்குவதும், கீழ்ப்படியிலுள்ளவை பிராணவாயு அல்லது நாடிகளின் சத்தியாகத் துணிந்துகொண்டு, எல்லாப் புலனறிவும், அதனல் போதவறிவும், பிராணவிகாரங்களென மதிப்பதும் ஆங்கிலேய நூலோரில் அசாதாரணமல்ல. இவ்விரண்டு கொள்கையும் தவறென இவ்விடத்தில் நிலைநிறுத்தல் கூடாமையாயிருப்பினும் இராப் பகல்களின் சந்தியை நிச்சயித்தல்போலப் புலனறிவு போதவறிவு புணரும் எல்லை குறிப்பித்தல்அசாத்தியமல்லவெனவும், அப்படியே அசாத்தியமாயினும் அவற்றின் வேற்றுமை இராப்பகலுக்குள்ள பேதம்போல அபாத்தியமாய் நிற்கத்தக்கதே எனவும் மாத்திரம் இவ்விடத்தில் குறிப்பிக்கலாம். இதுவன்றி மனிதருக் குரித்தென்ற போதவறிவு விலங்கினங்களுக்கும் உளதோ இலதோ என்ற விவாதமும் பெருங்கீர்த்தி படைத்துளது. புலனறிவே விலங்கினங்களுக் குரித்தென்பது பெரும்பான்மையர்க்குப் பொருத்தம். சிலந்திவலை, பறவைக்கூடு முதலிய விசித்திரவேலை யாவும் புலனறிவின் ஆதிக்கத்தாலேயே நடப்பன, எனினும், மந்தி குதிரை கிளி முதலிய உயர்ந்த ஜீவஜாலங்களுக்கு ஒருவாருன போதவறிவினுதயம் இல்லையென மறுக்கற்பாற்றன்று. பொதுவாய் மனிதருக்கு எப்படிப் போதவறிவு விரிந்தும் புலனறிவு சுருங்கியும் நிற்பதோ அப்படியே விலங்கினங்களுக்குப் புலனறிவு விரிந்தும் போதவறிவு அல்லது தற்போத அறிவின் உதயம் சுருங்கியும் நிற்குமென்பதே உண்மைக் கடுத்ததும், புலனறிவு போதவறிவைப் பிரித்தற்குப் போதுமானதும் ஆக இருக்கிறது.

இயல்பாக மனிதருக்குப் புலனறிவால் சாத்தியப்படுபவை சுருங்குமெனினும் தற்போத அறிவால் பலகால் செய்து பழகினவைகளை அவைகளில் சம்பந்தப்படும் புலனறிவால் மாத்திரம்

பிற்பாடு நடந்தேறக் கூடியவையாக மாற்றுகின்ற ஒரு சக்தி யுளது. இதற்கு 'வாசனை,' 'பழக்கம்' எனப்பெயர். நாம் கைப் பழக்கத்தால் எழுதும்போதும் நாப்பழக்கத்தால் பேசும்போதும் வாசனாசக்தியால் உண்டான புலனறிவே நமக்குப் பேருதவி செய்யாநிற்கும். இதன் உண்மை கையொப்பம் வைக்குங் காலையும் உருவேற்றியபாடம் ஓதும்போதும் யார்க்கும் தோற்ற லாம். யாதொரு சிந்தனையுமின்றிக் கையும் நாவும் தம் வினையியற்றி முடிப்பதுமல்லாமல், சிந்தித்தல் பிசகிற்கு ஏதுவாக முடியினும் முடியும். அப்படிப் பிசகு நேரிடில் பின்னும் துவக்கமுதல் எடுத்துக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமும், இவ்வினைகள் புறக் கரணத்தின் வாசனா வல்லபத்தால் நடந்தேறுபவைகளென நன்றாய் வெளியிடும். சிறுகுழந்தைகள் விளக்கின் முன்னிருந்து பாடம் உருவேற்றும்போது கண் முதலிய புலன்களும் மன முதலிய கரணங்களும் நித்திரையிற் சோர்வடைந்தும், சுழற்றி விட்ட குலால சக்கரம்போல் நாவானது தன் தொழிலை ஒரு வாறு உளறிமுடித்தல் காணாதார் யார்? இப்படி ஆதியில் போத வறிவால் பழகிப் பின் நமது ஞானேந்திரிய கருமேந்திரியங்களின் வாசனாபலத்தால் நடந்தேறும் நித்திய நடபடிகள் எத்தனையென மொழிவோம்? இயல்பாய் மனிதர் விலங்குகளிடத்தில் காணும் புலனறிவெல்லாம் இப்படி ஒருகாலம் போதவறிவோடு பழகிய வாசனா விசேஷமே எனக் கூறுபவர், இக்காலத்திய ஆங்கிலேய நூலோரில் சிலரன்றி இந்நாட்டு மகான்களிலும் * சிலருளரெனி னும், அப்பழக்கம் இப்பிறப்பி லடைந்ததன்றென வெவ்வேறு காரணங்களால் இருதிறத்தாருந் துணிகின்றபடியால் முன் கூறி நிறுத்திய புலனறிவிற்கும் போதவறிவிற்கும் உள்ள பேத விலக்கணம் பழுதாவதன்று.

இவ்விதம் போதவறிவோடு சிலகாலம் பழகிய வாசனைவைப வத்தால் விளையும் தொழில் யாவையும் 'கலை' எனக் கூறலாம். கழை சயிறு இவற்றில் நின்றாடல், வீணை வேணு முதலிய வாச் சியப்பயிற்சி, இவைபோன்ற அருந்தொழில்களன்றி நூல் பின்னல், பூத்தொடுத்தல், கறியாக்கல் முதலிய சாதாரணத்

---

*"பழக்கங் கொடியதுபார் பாறையினுங்கோழி, கிழிக்கும் பொலியைக் கிளறும் - விழித்துங், குருடர்க் கொளிபகையாக் கூசிக்கோல்போடார்."

—ஒழிவிலொடுக்கம்.

தொழிலும் கலையெனும் பெயர்க் குரித்தே என்பது, அவையாவும் மேற்கூறிய வாசனு விசேடங்களாக இருப்பதுமல்லாமல் நம் முன்னோர் கூறியபடியே அவை 'வாசா சாத்திய' மன்றிக் 'கிரியா சாத்தியங்க'ளாக நிற்பதினுலும் விளங்கும். கலைகள் அனைத்தும் கண்டு பழகவேண்டியவையே யன்றி வாக்கால் உபதேசிக்கத் தக்கதன்று. மனுதீதமான பரம்பொருள் எப்படி மனிதரின் இயற்கைஅறிவாகிய போதவறிவிற் கப்புறப்பட்டு நிற்கின்றதோ அப்படியே அதற்குக் கீழ்ப்பட்ட இயற்கையான புலனறிவும் செயற்கையான வாசனு விசேஷங்களும் வாக்கு மனங்களுக்கு அகப்படுவதில்லை. வாசனு விசேடங்களான 'கலைகளை' அக்ஷர விலக்கணம் முதல் அவஸ்தாப் பிரயோகம் வரை கூச ஆக வகுப்பது நம் முன்னோர் வழக்கம். இவற்றிற் சிற்சிலவற்றை நீக்கி மற்றும் சிலவற்றை யுட்படுத்திப் பலவாருகக் கணக்கிடலு முண்டு. இதுவே கலைகள் இத்தனைதான் என்று வரையறுத்தலின் வருத்தத்தை விளக்கும். ஆனதினுல் கலைகளை எண்ணிக் கணக்கிடல் ஒழித்து அவைகளின் முக்கிய இலக்கணங்களின்படி வகுத்துக் காட்டுவதே தகுதி.

இப்படி யோசிக்கில் 'கலைகள்' பொதுக்கலை யோககலை என இருபெரும் பிரிவடைந்து, அவற்றுள் ஒவ்வொன்றும் 'நற்கலை' எனும் ஒரு விகற்பமும் பொருந்தும். 'பொதுக்கலை' என்பது புறக் கரணங்களி லேறிய வாசனுவைபவத்தால் சாத்தியமாகுபவை. இவற்றிற்கு யாதாவது ஒன்றிரண்டு ஞானேந்திரிய கருமேந்திரியங்களின் வாசனுசாதுரியமே முக்கியம். சிலாதாரு தாம்பிராதிகளை உருவாக்கும் தச்சு கம்மியத் தொழில்களும், கர கௌசல விசேஷங்களான தையல், பின்னல், நெய்தல், சித்திரம் முதலியனவும், ஆடல் பாடல் ஆதியாகக் கருமேந்திரிய ஞானேந்திரியப் பழக்கத்தால் மனிதர் பழகுவனவும், பழகக் கூடியனவும் ஆகிய எல்லா வாசனுவிசேடங்களும் பொதுக்கலையுள் அகப்படும்.

*கலைகள் இடைவிடாப் பழக்கத்தாலேயே சாத்தியமாயினும், பழகவேண்டிய முறைமைகளையும், சாத்தியப்படுகின்ற பயனுக்கும் சாதனத்திற்கும் உள்ள சம்பந்தங்களையும் காரியகாரண விசாரணைக்கு இடமுள்ளமட்டும் ஆராய்தல் கூடியதாகவே இருக்கின்றது. அவ்வித ஆராய்ச்சிகளைக் 'கலைநூல்' என்று கூறத்தகும். கலைநூலுக்கும் சார்புநூலுக்கும் வினைகளே கருத்தாதலால்'*

அவற்றின் ஒற்றுமையும் முறைக்கிரமமும் எடுத்துக்காட்டாதே விளங்கலாம். சார்புநூல் பொதுவான விஷயங்களின் உணர்வைத் தொழிலுக்கு அமையுமாறு திரட்டிக்காட்டும். கலைநூல் புலனுதிகளின் வாசனையால் சாத்தியப்படும் தொழிலை ஆராய்ந்து, அது நடந்தேறும் முறைமையை விளக்கும். இதுவே அவற்றின் வேற்றுமை.

௩௫. கீதசித் திரங்கவி யாதிய பொதுவுண்
ணலனேர் பயத்தலி னற்கலை யென்ப.

மேற்கூறிய கம்மியர் தச்சர் ஆதியான கைத்தொழிலாளர்கள் யாவருந் தத்தம் கலைபயின்று தொழில் செய்வது யாதேனும் ஓர் இன்பமடைதற்கே. பசி முதலிய துன்பம் துடைத்தலும் ஒருவித இன்பமேயாம். ஆனால் இத்தொழில்கள் பரம்பரையாய் இன்பம் தருவனவேயன்றித் தாமே ஆனந்தகரமா யிருப்பவையன்று. வேறொன்றைக் குறியாமல் நேரே சுகந்தரும் கலைகளுமுள. கானம் செய்வோன் தனக்கும் பிறருக்கும் அத்தொழிலாலேயே பிரத்தியக்ஷமாக சுகம்விளைத்தல் யாவரும் அறிவர். அப்படி நேரே இன்பம் தராத விஷயத்தில் கானம் என்னும் கலை வேறு ஒரு பயனும் உடையதன்றே! இப்படியே சித்திரம் நடனம் கவனம் முதலியனவும். இவற்றையே சிறப்பு நோக்கிக் 'கலை' என உபசரித்தலும், "நற்கலை" என அடைமொழியிட் டறைதலும் வழக்கம். "நற்கலை" இன்பங்களுக்குக் கூறிய இவ்விலக்கணமன்றி வேறு ஒன்றிரண்டு விசேட குணங்களும் உண்டு. நற்கலைகளால் பிறக்கும் இன்பம் எத்தனைபேர் திரண்டனுபவிக்கினும் குறைவுபடாது. கண் காது என்ற உயர்ந்த புலன்களே இவற்றிற்குரியன. 'அழகு' என நாம் அனுபவிக்கும் யாவும் 'நற்கலை' வகுப்பை ஆதரவாகவுடையன. 'நற்கலை'களுக்குப் புலன்வாசனையன்றி அழகினில் ஆனந்திக்கும் மனோதருமம் என்னும் அகக்கரண வாசனாவிசேடமும் வேண்டியதுண்டு. "சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்" என்பது பழுதன்றேனும் கைநாப்பழக்கங்கள் மாத்திரம் போதாவென்பது யாரும் அறிவர்.

இந் நற்கலைகளைக்குறித்த கலைநூல் அந்த அந்த நற்கலைத் தொழில்கள் சாத்தியப்படும் முறையை விவகரிக்கும். தூர சமீபங்கள் இன்ன தந்திரங்களால் சித்திரிக்கப்படுகின்றன என்பதாதியும், ஒலிகள் இன்ன இன்னமுறையாய் மாறுபட்டுப் புணர்ந்து

பண்ணுகின்றன என்பது முதலியனவும், கவிநயம் இன்ன இன்ன சொற்பொருள் சேர்க்கைகளால் பிறக்கின்றன என்பது போன்றனவும், இவைகளைப் பற்றிய கலைநூல் வரன்முறை ஆராயும். இக்கலை நூல்களைக் கற்றதுகொண்டு கலைகளில் தேர்ச்சி வரக்கூடியதன்று. அவற்றில் கல்லாதார்க்குத் தேர்ச்சிவருவதும் எங்கும் சகஜம். ஆகையால் அந்த அந்தக் கலைகளுக்கேற்ற ஞானேந்திரிய கருமேந்திரிய சாதுரியமே முக்கிய ஆவசியகம்.

௩௬. இயற்கையும் பயிற்சியு மியைந்திடக் கரணம்
வியப்புறச் சில்வழி விரிந்துமற் றொடுங்கல்
சொலற்கரும் யோகமென் றுரைக்கவும் படுமே.

மேற் கூறவேண்டிய யோகக்கலைகளின் இயற்கை முற்கூறியவைபோல எடுத்துக்காட்டச் சற்றும் எளிதன்று. அவை யுளவோ இலவோவென யாவராலும் சந்தேகிக்கத்தக்க அருமையை உடையன. கரகௌசலாதி சாதாரண கலைகளும் சங்கீதாதி நற்கலைகளும்போல அவை பொதுவாகப் பழகி வரக்கூடியவையல்ல. ஆனால் பொதுக்கலைகளும் எந்நாட்டாராலும் ஒன்றுபோல அறிந்து பயிலுவதற் கேற்றவை யன்று என்பதும் வாஸ்தவமே. துப்பாக்கி சுட்ட ஒருவனைக் கண்டு இவன் ஏதோ மின்னல் இடி கொண்டிழிந்த தேவனோ என்று சந்தேகித்த பலைமூடன் கதை, ஒருதேசத்துள்ள சாதாரண கரகௌசல சாமர்த்தியம் மற்றொரு தேசத்தார்க்கு அமானுஷியமாய்த் தோற்றத்தக்க பக்குவ வேறுபாடு மனிதருக்குள் உண்டென்பதை விளக்குவதல்லது வேறென்னை? ஒருநாட்டிற்றானே இத்தன்மையான பக்குவ வேற்றுமை இல்லாததல்ல! அருமையான கானத்தைக் கூக்குரலாக மதித்து, அக்கான இன்பத்தால் பாணற்குநேர்ந்த சிரகர சலனங்களைச் சந்நிரோகோத்பாதன சூசகங்களாக உணர்ந்த சங்கித ரஸிகர்கள் இக்காலத்து இல்லாதவர்கள் ஆயினும் ஆகுக: மலை நதி ஓட முதலிய காட்சிகள் அச்சியந்திரத்தில் சித்திரித்து வரும் அதிவிசேட படங்களை நோக்கில், கருமை வெண்மை என்ற நிறபேதம் மாத்திரம் கண்டறிந்து கொள்ளும் மனிதர் எத்தனை நாம் கண்ணாரக் கண்டுளோம்? யந்திர விசேடங்களால் இந்நாட்டிற்றானே நெய்த ஆடைகளை அணியும் நம் சுதேசர்களிற் பலர், ஏதோ சில பாவைகளால் நூற்கப்பட்ட நூற்களை

மற்றும் ஏதோ சில பாவைகள் நெய்து ஆடையாக்கின என்றல்லாது, அவ்யந்திரத் தொழின்முறைமை எத்தனைகாலம்உபதேசிக்கினும்அறியஅசக்தராயிருப்பது அசாதாரணமன்றே! அப்படியே நீராவியின் வல்லபத்தால் ஓடும் புகைவண்டியையும், மின்மயசக்தியால் தொழிற்படும் மின்மய தந்தியையும் உள்ளவாறுணர்த்த எத்தனிக்கும் ஆங்கிலேய பாஷைகற்ற சிறுவர்களின் புறமதச் சார்பையும் பிராந்தி ஞானத்தையும் குறித்துப் பரிதபித்து, ஆகோஷவாதத்தால் அவர்களின் வாயை அடக்கி, முற்காலத்து போசரிஷி என்ற ஒருவரால் ஐரோப்பு நாட்டாருக்குக் கிடைத்த மந்திர வைபவங்களே இவைகளெனச் சாதிக்கும் குக்கிராமசாஸ்திரியாருக்கு மறுதலிக்க ஏலாத பிரத்தியக்ஷமாய் இப்புகைவண்டி மின்தந்தி முதலியன தமது அனுபவத்திற்கு வராத விஷயத்தில், அவற்றைத் தாம் அபிப்பிராயப்பட்டிருக்கும் உலகியற்கைக்கு விபரீதமெனத் துணிந்து, முற்றிலும் பொய்க்கதையாகக் கருதிச் சற்றும் கவனியாது தள்ளுவதற்கு உளங்கூசுவரோ? ஆதலால் சரகௌசலாதி பொதுக்கலைகளும் பக்குவானுசாரமாகச் சிற்சிலரால் பழகவும் அறியவும் கூடியவை அன்றி, யாவர்க்கும் உரியன என்பது ஏகதேச வாக்கியமே ஒழிய பூரண உண்மையன்று.

எல்லாக் கலைகளுக்கும் இவ்வாறு ஆவசியப்படுகின்ற பக்குவ நியமம் யோககலைகளில் அதிசரித்து நின்று அவற்றை ஆங்காங்குச் சிற்சிலருக்கே உரித்தாக்கி, அவ்வருமையால் அக்கலைகளை உளவோ இலவோ எனச் சந்தேகப்படச் செய்கின்றது. இவ்வருமையே இக்கலைச் செயல்களுக்கு அற்புதத்தன்மை அளிப்பதும். மேலும் இக்கலை பயில்வோர் தங்கள் அறியாமையாலோ அல்லது வேறு காரணங்களாலோ செய்துவரும் ஜாலங்களும் கூறிவரும் தவறான காரணகாரிய நியாயங்களும் இக்கலைகளுக்குப் பெருங்கேடு விளைக்கின்றன. அவை முற்கூறிய ஆச்சரிய திருஷ்டிக்கு அனுகுணமாய் நின்று அக்கலைகளை அமானுஷியமென ஒருதிறத்தார் மதிக்கும்படி செய்வதோடு, மற்றொரு திறத்தார் கொண்டிருக்கும் ஐயப்பாட்டிற்கும் அனுகூல மாகின்றன. இவ்விருதிறத்தாரையும் இவ்விடத்தில் கவனிக்கவேண்டியதுண்டு. யாதாவதொரு விருத்தாந்தத்தில் சிற்சில பொய் மேற்படத் தோற்றுவதால் அஃது ஆதியந்தம் பொய்யென மதித்தல், பாசி படர்ந்திருக்கும் ஏரியில் நீர் இல்லையென மதித்தலை யொக்கும்.

அன்றியும் யாதாவதொரு தோற்றம் நமது கொள்கைக்கு விபரீதமா யிருப்பதினால், ஆராயாமல் அது பொய்யெனவும், ஜாலமெனவும் தீர்மானித்தல், நமது விஷய ஞானபிவிருத்திக்கு ஏககாரணமாயிருக்கும் அனுபவ வழியை அடைக்கும் கல்லாக முடியும். எல்லாம் அறிந்தவர்கள் ஒருவரும் இல்லாதபடியால், நமது அற்ப அனுபவத்திற்கிசையக் கொண்டிருக்கும் உலகியற்கைக்கு விபரீதமெனத் தோற்றுபவை யாவும் இல்லையென ஒருதலையாய் நிராசரித்தல், தருக்க நியமத்திற் கடுத்ததன்று. இப்படி நியம விரோதமாய்த் தங்கள் மனதிற்கு எட்டாதவை யெல்லாம் இல்லையென இறுமாந்து, புதிதான தோற்றங்களை ஆராயாது விடுதல் ஒருதிறத்தார் குற்றம். ஆனால், இல்லையென மறுக்க ஏலாதவை யாவும் உண்டென நம்புவதும் நியமானுசாரமன்று. இன்றடித்த கடற்திரை கசஎஅ என ஒருவன் கூறுவதை நாம் மறுக்க ஏலாததினால், நம்பவேண்டிய துண்டோ? இங்நிற்கிற புளியமரத்தின் அடியில் நூறுசஜத்திற் கப்பால் ஒரு சுவர்ண விக்கிரகம் இருக்கின்றதென்றால், அப்படி இருக்கக்கூடுமென ஒப்புக்கொள்ளுவதன்றி இருக்கிறதெனத் துணிந்து நம்புபவர் யார்? இருக்கக்கூடியவையெல்லாம் இருக்கின்றனவெனத் துணிந்து பிரவர்த்திப்பவர்கள் பேரிடர்ப்படுவார் என்பது, 'இல்லாதன இல்லை இளங்குமரா' * என்ற துணிவால் இலக்குமண வாக்கியமும் மறுத்துப் பொன்மானின் பின்சென்ற இராமமூர்த்தியே சான்றாக நின்று காட்டுவார். ஆனதினால் யாதாவது ஒன்றைக் குறித்து ஆலோசிக்கும்போது அது நமது சிற்றறிவினால் அறிந்தமட்டுமுள்ள சுபாவநியமங்களுக்கு அடங்காததாய்த் தோற்றுகிறபடியால் அதனை இல்லை என நிராசரித்துத் தள்ளலும், 'இல்லாதன இல்லை' என்ற ஏககாரணத்தால் எப்பழங்கதையாயினும் மெய்யென யாதொரு சோதனையுமின்றி நம்பிக்கொள்ளலும் ஒன்றுபோலவே தருக்க நியமங்களுக்கு விருத்தமானவை.

யோக கலைகளைப்பற்றி அபிப்பிராயப்படுபவரில் பெரும்பான்மையரும் மேற்கூறிய இரண்டு வழுக்களுள் ஒன்றிற் சிக்குண்டு தம்மனதிற் கேற்றபடி துணிந்துகொண்டவரன்றி,

---

* "நில்லா வுலகின் நிலைநோர் மையினால்
வல்லாரு முணர்ந்திலர் மன்னுயிர் தாம்
பல்லா யிரகோடி பரந்து ளவால்
இல்லா தனவில்லை யிளங் குமரா.—" இராமாயணம்,

நூலொழுங்கின்படி சோதனை செய்தவர்களாகக் காண்பதரிது அவ்விதம் சற்றேனும் சோதனைசெய்வதற்கு இஃது இடமல்ல வெனினும் அவ்வித சோதனைக்கு யோககலைகள் உரியனவெனக் காட்டுவதற்கேற்ற ஒன்றிரண்டு சங்கதிகளையேனும் சொல்லாது விடுதலும் தகுதியாயில்லை. சோதனைக்கே உரித்தல்ல என இக் கலைகளை மறுப்போர் பெரும்பாலும் ஐரோப்பிய நாட்டாரும் அவர்வழியாய் நூல் ஆய்ந்தோரும் ஆக இருப்பதினால், அந்நாட்டில் இக்காலத்து நடந்துவரும் சில விஷயங்களையே குறிப்பிப்பது உசிதமாக இருக்கலாம். அவ்விஷயங்கள் யோககலையின் இயல்பைப் பிரகிருதத்தில் ஆவசியப்பட்ட மட்டும் விளக்கவும் கூடும்.

இவ்விஷயங்களில் ஒன்று ஐரோப்பு தேசத்தில் 'மெஸ்மரிஸம்' அல்லது 'வசிகர நித்திரை' எனப் பெயர்படைத்த ஒருவித ஆச்சரியமான மனோநிலைமையாம். இது தற்காலம் அங்குள்ள எல்லா நூலோராலும் அங்கீசரிக்கப்பட்டு அதின் இலக்கணமும் காரண காரிய சம்பந்தவிவரமும் இன்னவெனப் புலப்படாமல் இருப்பதால் நன்றாய்ப் பரிசோதிக்க வேண்டிய ஒரு நூதனத் தோற்றமென மதிக்கப்பட் டிருக்கிறது. இந்த விசேடநிலைமை இத்தேசத்தும் ஆங்காங்குச் சிற்சிலர் காட்டப் பொழுதுபோக்காக அநேகர் கண்டும் அனுபவித்தும் இருக்கலாம். தனக்கு முந்திய காலத்தும் இவ்வித நித்திரை உண்டுபண்ணி வசிகரணம் செய்தவர்கள் ஐரோப்பு நாட்டிற்றானே இருந்துள்ளாரெனினும், கஎ௩௪ஆ பிறந்து கஅ௧௫ஆ வரை இருந்த ஆந்தனி மெஸ்மர் என்னும் ஒரு வைத்திய பண்டிதர்மூலம் இத்தொழிலுக்குப் பிரசித்தி நேர்ந்தபடியால் அதற்கு அவர் பெயரிடப்பட்டது. உரோக பரிகாரங்களுக்கு இவ்வசிகரண நித்திரை உபயோகப் படுவதாகப் பாரிஸ்நகரில் பெரும் சுருதி எழுப்பித் தான் அதனை உண்டு பண்ணும்போது, தீபம், சித்திரம், சக்கரம், மந்திரம் முதலான சில ஜாலங்களையுங் காட்டிப் பொது ஜனங்களை மயக்க, தன்னையும் தன் வைத்தியத் தொழிலையும் அமானுஷியமாக அவர்கள் மதித்துப் பெருந்திரளாகக் கூடும்படி நேரிட்டதினால், அதனை உணர்ந்த அந்நகர்த் துரைத்தனத்தாரால் வேண்டிக் கொள்ளப்பட்டுச் சில வித்துவான்கள் நூலொழுங்காய் இதனைச் சோதனை செய்யச் சம்பவித்தது. ஆனால் அவர்கள் ஆழ்ந்து பாராத குறைவாலோ அல்லது தாங்கள் அறியாததாக ஒன்றை நூதனமாய் ஒப்புக்கொள்ளுதல் இகழ்ச்சி

யெனக் கருதும் கல்வி அகங்காரத்தாலோ மெஸ்மர் செய்துவந்த ஆடம்பரங்களை மாத்திரம் சோதனை செய்து, அவை புரட்டென வெளியிட்டபடியால் வசீகர நித்திரையின் வாஸ்தவ நிலைமையை ஆராயாமல், அதுவும் சாதாரண நாடி விகாரப்பாடு எனத் தீர்மானித்தனர். ஆயினும் பொதுவான அறியாமையாற் சிலரும், ஆச்சரியத்தில் அகமகிழும் அற்ப குணத்தால் சிலரும், கண்ணுரக் கண்டதின் உண்மையை அறியவேண்டுமென்ற ஊக்கத்தால் சிலரும் இப்படிப் பற்பல காரணங்களால் பலரும் பழகிவர இவ் விசேடத்தோற்றம் முற்றும் கைவிடப்படாமல் வழங்கிவந்தது. ளகூடு - கஅகூ0 வருஷங்கட்கிடையிலிருந்த பிரைட் என்னும் பண்டிதர் ஒருவர் இதன் உண்மையை நிஷ்காமியமாய்ச் சோதனை செய்யக் கருதி இத்தொழில் பயின்றுவரவே அவர் வழியாய் அக்காலத்தில் சாரீர சாஸ்திர சிரேஷ்டாசாரியராய் இங்கிலாண்டு தேசத்தில் வீற்றிருந்த கார்ப்பெண்டர் முதலான அநேக பண்டிதர்கள் அறியவும் அதற்கு வசீகர நித்திரை என ஒரு புதுப்பெயர் கொடுத்து அதன் அருமை அங்கீகரித்து ஆராயவும் நேர்ந்தது. இப்படியே கஅளகூ௵த்தில் ஜர்மனி தேசத்தில் ஹான்ஸன் என்னும் ஒருவர் முன் மெஸ்மர் செய்ததுபோலவே பொது ஜனங்களை இத்தொழிலால் மயக்கித் திரட்ட ஆரம்பித்தது கண்டு அம்மயக்கத்தை மாற்றும்படி ஹேடன்ஹேன் முதலிய சாஸ்திரபண்டிதர்களும் இதனைப் பயின்று நூலொழுங்காய் ஆராயத் தலைப்பட்டனர். இவ்வாறு பரவப்பெற்றுப் பொதுவாக ஐரோப்பு அமெரிக்கா என்னும் இரண்டு கண்டங்களில் உள்ள எல்லா வித்துவான்களும் இப்போது இவ் வசீகர நித்திரையின் உண்மையை அங்கீகரித்துப் பரிசோதனை விஷயங்களில் தலைமையான ஒன்றாகப் பாராட்டி வருகின்றார்கள்.

இவ் வசீகர நித்திரையின் சம்பவங்கள் மிகவும் ஆச்சரியமானவை. அவற்றோடு பொதுஜனங்கள் அஞ்ஞான கிருதமாகிய அநேக ஆபாசங்களையும், கண்மயக்கத்தால் பிறந்த தங்கள் தங்கள் தோற்றங்களையும் கலந்து பிதற்றுவது வழக்கம். அவற்றிற்கொன்றும் காது கொடாது இத்தோற்றங்களை நிஷ்பக்ஷபாதமாய் ஆராயத்தக்க சத்திய வாஞ்சையும் தருக்காதி சாஸ்திரப் பயிற்சியும் உடையோரால் சாக்ஷிப்படுத்தப் பட்டவை மாத்திரம் எடுத்துச் சோதனை செய்வதே நூல் ரீதிக்கடுத்தது. அப்படிப் பார்க்கினும் வசீகர நித்திரையின் சம்பவங்கள் ஆச்சரியத்

தன்மையில் குறைவுபடுபவையல்ல. அவற்றின் வரலாறு ஒருவாறு சுருக்கி இவ்விடத்தில் கூறுவதொழிய அருமைக்குத் தக்கபடி விரித்துரைக்க இடமில்லை. வசீகர நித்திரை வரவழைக்கும் மார்க்கங்கள் பலவுளவெனினும் அவற்றுள் சாதாரணமானது கண்ணுடித்துண்டு, பொத்தான் என்னும் கஞ்சுகபந்தனம் முதலிய ஒளிவிடும் பதார்த்தங்களில் சலனமற இருந்து நோக்க வைத்தலும் அவ்விதம் நோக்குகின்றவன் கண் மயங்கிச் சோர்வடையுங்கால் அவன் முகமுதலாகக் கீழ் நோக்கிக் கைவிரலால் ஒன்றிரண்டுமுறை தடவிவிடுதல்போலப் பாவனை பண்ணுவுமாக இருக்கின்றது. அவ்விதம் செய்தவுடன் கண்மயங்கி இருந்தவனுக்குச் சாதாரண நித்திரைக்குள்ள குறிகள் தோன்றும். அக்காலை யாதும் செய்யாது விட்டுவிடில் காடநித்திரை மேலிட்டவன்போல் போதமிழந்து சோர்வடைந்து விழுந்து தூங்கிவிடுவன். இப்படி நேரும் நித்திரையும் பல விசேடங்களை உடைய ஒரு வியப்பான அவஸ்தையன்றிப் பொதுவாய் மனிதர் நாடோறும் அனுபவிக்குஞ் சுழுத்தியன்று. அதற்கு 'வசீகர சுழுத்தி' யெனப் பெயர் கூறலாம். ஆனல் அதன் தன்மையை ஆராயுமுன் அவ்விதமான சுழுத்தி நேரிடாமல் தடுக்கில் உண்டாம் வைபவங்களைக் கவனிப்போமாக. அப்படித் தடுப்பதற்கு மேற்கூறியவழி கண்மயங்கிவரும் புருஷனுடைய இமைகளை விரலால் திறந்துவிட்டு அவனேடு யாதேனும் ஒன்றைப் பற்றிச் சம்பாஷித்தலே போதுமாக இருக்கின்றது. இச் சம்பாஷணையில் உண்டாம் விநோத வேடிக்கைகளே பொதுஜனங்களுக்கு மகிழ்ச்சியும் அதிசயமும் உண்டுபண்ணி அவர்களை இந்நித்திரையிற் பிரியப்படுத்துகின்றன. வாஸ்தவத்திலும் அவைகள் வியப்பானவைகளே. சம்பாஷணை ஆரம்பித்ததின்பின் சிறுபொழுது மேற்கூறியபடி வசீகரிக்கப்பட்டவனுக்குத் தன்னை வசீகரித்த வசீகரன் வார்த்தையன்றி மற்றையர் பேசும் பேச்சுகளும் தன்னைச் சூழ்ந்திருக்கும் பொருள்களும் சாதாரண காலத்தில் யார்க்கும் தோற்றுவபோலவே தோற்றும். அங்ஙனம் தோற்றினும் அவ்வசீகரன் சொல்லுபவை எவையோ அவைகளை மாத்திரம் உண்மையாக நம்பிப் பிரவர்த்திக்கிறவனுகப் பவிப்பதே விசேடம். "உன்கை நீட்டக்கூடியதல்ல" வென்ருல் இவன் எவ்வளவு பிரயாசப்படினும் நீட்டுகிறதற்கு ஏலாதவனுகவே ஆய்விடுகிருன். அது வெறும் நடிப்பு அன்று என்பதற்கு அந்நிலையி

லிருந்த ஒரு சிறுவனை நோக்கிக் கர்ணி என்னும் வித்துவான், "ஒரு பவுன் இதோ கைநீட்டி வாங்கிக்கொள்" என்றதற்கு அதற்காக இயன்ற அளவு முயன்றும் முடியாதிருந்தான் என்று அவர் கூறும் சாக்ஷியம் * போதுமானதாக இருக்கின்றது. அல்லாமலும் வசீகர நித்திரைக் குட்படுத்தப் படுபவர்களுக்கும் வசீகரனுக்கும் யாதொரு பழக்கமேனும் இருந்தால் இவ்வித சாஸ்திரரீதியான பரிசோதனை காலங்களில் அவர்களை உபயோகப் படுத்துவதன்றே! மேலும் இவ் வேலாமைக்குரிய சரீர சின்னங்களும் சாரீர சாஸ்திரிகளால் பரிசோதிக்கப்பட்டு உண்மைப் படுத்தப் படுகின்றன. முழங்கையை நீட்டுவதற்குரிய புலானுறுப்புக்களும் இசைப்புகளும் வாதரோகாதிகளால் முடங்கப் பெற்றவர்களுக் கிருப்பனபோலவே வலுத்துச் சுளுக்கடைந்தவையாய் அக்காலம் காணப்படும். அன்றியும் வசீகரிக்கப்பட்டவனுடைய கண்ணுக்குத் தெரியாதபடி திரைச்சீலையால் மறைக்கப்பட்ட ஓரிடத்தில் அவனுடைய கைவிரல்களை நீட்டச் செய்து அவ்விரலில் யாதாயினும் ஒன்றைப் பரிசோதனை கருத்தர்களுக்கு இசையும்படி தெரிந்தெடுத்து வசீகரனிடத்தில் காண்பிக்கில் அதனைமாத்திரம் மறுபடி மடக்க ஏலாதவண்ணம் வசீகரிக்கப் பட்டவனுடைய அறிவின்றி வலுப்பித்து மாறுபடுத்தக் கூடியதாயும் இருக்கின்றது. இப்படிக் கருமேந்திரியமன்றி ஞானேந்திரியங்களும் இவ்வவஸ்தையில் வசீகரப்படுகின்றன. சுத்த ஜலத்தைப் பால், மது அல்லது ஆமணக்குநெய் என்றிப்படி ஒவ்வொன்றாக மாறுபடக்கூறிக் குடிக்கும்படி வசீகரன் கற்பித்தால் அதனைக் குடிக்கும்போது அந்த அந்த பாவனை பதார்த்தங்களுக்கு ஏற்க சுபாவமாக முகக்குறிகள் தோன்றுவதும் சாரீராதி சாஸ்திர பண்டிதர்களால் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. புறக்கரணங்களுடன் அந்தக்கரணங்களும் வசீகரிக்கப் படுகின்றன. கைலேஞ்சியைக் காட்டி அது பேயென வசீகரன் கூறில் லேஞ்சியே எனத் தனக்குத் தோற்றினும் பேயெனும் பிராந்தி தன்னைக் கவர்ந்திழுக்க அப்பிராந்திக் கேற்க பயகம்பனாதிகள் உண்டாய் ஒருவன் ஓடத் தலைப்பட்டான் எனல் † சற்றும் வியப்பன்று. மீன், கோழிக் குஞ்சு முதலியவாகத் தன்னை வசீகரன் கற்பிக்கில் அவைகட் கியன்றபடி முறையே பூமியில் விழுந்து நீந்

* Mind Vol : IX page 504.
† Mind Vol. IX. page 116.

துதல், சிறகடித்துக் கூவல் கொத்துதல் ஆதியான தொழில்களைக் காட்டி அவ்வசீகரனது சங்கற்ப விசேடத்தோடு தனது அகம் புத்தி தாதான்மியப்பட்டு அது அதுவாகத் தானே தனதுளம் மாறிவிடும் அதியர்ச்சரியமான சம்பவங்களே தருக்காதி நூல் வல்லோர்களால் சோதிக்கப்பட்டு சாக்ஷிப் படுத்தப்பட்டிருக்கின்றன. இவ்வித வியப்பான தோற்றங்கள் காணப்படும் இம்முதல் அவஸ்தையில் ஒருவாறு ஐம்புலன்கள் தமக்கெதிர்ப்படுகின்ற விஷயங்களை உள்ளபடி யுணர்தலும், தன் தேகத்தில் கிள்ளுதல் முதலானவற்றால் நேரிடும் நோவு தெரிந்து கொள்ளுதலும், வசீகரனுடைய சங்கற்பங்களால் அநுபவிக்கும் வேறுபாடுகள் நித்திரை நீங்கினதின்பின் ஒருவாறு ஞாபகம் இருத்தலும் அதற்கு விசேட இலக்கணமாக நிற்கின்றன. இம்முதல் அவஸ்தைக்கு வசீகர ஜாக்கிரமெனப் பெயரிடத்தகும்.

மேற்கூறிய அவஸ்தை முதிர்ந்து இரண்டாம் அவஸ்தை மேவிடும்போது பஞ்சேந்திரியங்களில் காது நீங்கலாக மற்றவை ஒடுங்கல் சகஜம். ஒருகால் அவை முற்றும் ஒடுங்காவிடினும் வசீகரனது ஆஞ்ஞைக்கு முழுதும் அர்ப்பிதமானவை யாகவே நிற்கும். எவ்வளவு கூச்சலிட்டு மற்றையர் இரையினும் அவை வசீகரனது அனுமதியின்றேல் கேளாதனவாயும், வசீகரன் எவ்வளவு மெள்ள முணுமுணுக்கினும் அவை கேட்பனவாயும் இருப்பது வியப்பே. தனக்குப் பழக்க முடையோராயினும் சிலரை அந்நியனுன ஒரு கவிஞன், படைவீரன், வியாபாரி என்றிப்படி வசீகரன் சங்கற்பித்துச் சொல்வனேயானல் அவர்கள் அப்படியே தனக்குத் தோற்ற அததற்கிசைய அவர்களோடு சம்பாஷித்தலு மன்றித் தன்னையே அப்படி வெவ்வேறு புருஷர்களாக வசீகரன் கற்பிக்கில் அவ்வவற்றிற்கேற்ப மாறுபட்டு அகம் புத்தி செய்தலும் வழக்கம். ஆயினும் இத்திசையில் யூகித்தல், தானுச் சங்கற்பித்தல் முதலிய அகக்கரண விருத்திகள் முற்றிலும் ஒய்ந்ததாக இல்லை. வசீகர நித்திரையிற்பட்ட ஒருவன் தன்னைச் சிரச்சேத தண்டனைக்கு விதிக்கப்பட் டிருப்பதாய் வசீகரன் சங்கற்பித்ததுக் கிணங்க அப்படியே தாதான்மியப்பட்டு விசனமாதிகள் தோற்றுவிக்குங்கால், தனது காதலி கடலில் வீழ்ந்திறந்தாள் என்ற செய்தி வர்த்தமானப் பத்திரிகையில் காண்பதாகக் கூற, அப்படியே நம்பித் தனக்குச் சிரச்சேத தண்டனை விதிக்கப்பட்டதைக் கேள்வியுற்று அத் துயரத்தால் அவள்

அவ்விதம் கடலில் வீழ்ந்திருக்கலாமென்று தானே யூகித்துச் சொன்னதுந் தவிர, பிற்பாடுவந்த பத்திரிகையில் அவ்விதம் அவள் வீழவுமில்லை, இறக்கவுமில்லை எனப் பிரஸ்தாபித் திருப் பதாக மறுபடியும் வசீகரன் சொல்ல, அதனையும் நம்பி அப்படி அவள் வீழ்ந்தவள் போலவும் இறந்தவள் போலவும் தோற்றின ளென்றுதான் முன் பத்திரிகையில் சொல்லியிருக்கக் கூடுமென் றும் அது தன் கஷ்டவிதி உணர்ந்த சோர்வால் தன் காதலிக்கு நேரிட்டதுவே என்று தானே ஒருசமாதானம் கற்பித்ததாகவும் கர்ணி என்னும் பண்டிதர் கூறும் * தமது பிரத்தியக்ஷானுபவம் இவ்விரண்டாம் அவஸ்தையிலும் அந்தக்கரணங்கள் தாமே தொழிற்படக் கூடுமென்பதை விளக்கும். இவ்விரண்டாம் அவஸ்தைக்கு வசீகர சொப்பனம் என்னும் பெயர் பொருந்தும். மூன்றும் அவஸ்தை இதிலும் கடிது. இதுவே முற்கூறிய வசீகர சுழுத்தி. அதில் சர்வ கருவி கரணங்களும் ஒய்ந்து கேவலம் பிரேதம்போல் கிடப்பதே சகஜம். ஒருகால் அகக்கரணங்கள் தோன்றினும் அவை வசீகரனது பிரியம்போலத் தொழிற்படுமே யன்றிச் சுயமே பிரவர்த்தித்தல் இல்லை. நோவு முதலிய சரீர ஸ்திதிகள் யாதொன்றும் தோன்றுவதல்ல. நகக்கண்ணில் ஊசி சொருகினும் ஓரான். உடலை மரப் பிண்டம்போல வசீகரனது இச்சைக்கிசைய உபயோகப் படுத்தலாம். முற்கூறிய இரண்டாம் அவஸ்தைக்கும் இம்மூன்றும் அவஸ்தைக்கும் சம்பந்தமில்லை யென்பது இரண்டாம் அவஸ்தையில் வசீகரனது ஆஞ்ஞை யாலேனும் செய்துவந்தமை யொன்றும் மூன்றில் ஞாபகம் வரா ததினாலும் அதனோ டியாதொரு தொடர்ச்சியுங் கூடாமை யாலும் விளங்கும். வசீகரத்தன்மை நீங்காமல் மறுபடியும் வசீகர சொப்பனவஸ்தையில் எழுப்பிவிடப்பட்டால் மூன்றும் அவஸ் தையாகிய வசீகர சுழுத்தியில் அடங்கிக்கிடந்த கரணங்கள் வெளிப்பட்டு முன் நிகழ்ந்த இரண்டாம் அவஸ்தையாகிய வசீகர சொப்பனத்தோடு ஞாபகத் தொடர்ச்சி அடைதலும் அப் படியே மறுபடியும் சுழுத்தி அவஸ்தை உண்டாய்த் திரும்பவும் கரணங்கள் அழியும்படி நேர்ந்தால் பூர்வம் அனுபவித்த சுழுத்தி யோடு தொடர்பு பெறுதலும் சகஜம். மீனாகப் பவித்து உடல் நடுக்கி நீந்துவதாகப் பாவனைகாட்டி நின்ற ஒருவன் சுழுத்தி அவஸ்தையை அடைந்து மூர்ச்சித்துக் கிடக்க, பின் எழுப்பப்

---

* Mind Vol. IX, page 499.

பட்டவுடன் மறுபடியும் தானே மீளுகப் பவித்துத் தரையிற் கிடந்து நீந்த ஆரம்பித்துக் கொண்டான் என்று கர்ணி பண்டிதர் சொல்லுவதே* இதற்கு அத்தாக்ஷி. இந்தச் சுழுத்தி அவஸ்தையில் முகம் முதலிய அங்கங்கள் சன்னிதோஷக் குறிகளைக் காட்டுகின்றன என்று வைத்திய பண்டிதர்கள் சொல்லுவதும் மேற்கூறியபடி உடலுக்கு நேரிடும் துயரங்கள் யாதொன்றும் அறியாது கிடத்தலுக்கு அனுகுணமாக இருக்கின்றது. இவ்வித கடின நிலைமையிலும் உள்ளம் வசீகரன் வழிப்பட்டு நிற்றல் முற்றிலும் வியப்பே. தன்னுடலில் பலர் கூடிக் கிள்ளுதலைச் சற்றும் உணராத சுழுத்தி நிலைமையிற் கிடந்த ஒருவன், பண்டொருகால் யாதோ ஒருவனுல் கிள்ளப்பட்டான் என்ற வசீகரனது இரக்கவசனம் மாத்திரம் கேட்டு அவ்வழி மனம் நொந்து அழுதான் என்ருல்† இவ் வசீகர வல்லமையை என்சொல்லலாம்! இச்சுழுத்தி அவஸ்தை ஒருகால் தானே நீங்கித் தன் மெய்யுணர்வு வரினும் வரலாம். ஆனுல் இவ்வித வசீகர நித்திரை சாதாரணமாக வசீகரனுலேயே நிவர்த்தியாவது வழக்கம். அதற்கு வசீகர நித்திரை வரவழைக்குங் காலத்தில் கீழ் நோக்கிக் கையிழுத்த சமிஞ்ஞைபோல மேல் நோக்கி இழுத்தல் போதுமாக இருக்கின்றது. இப்படி ‡ மூன்றவஸ்தைகளோடும் கூடின வசீகர நித்திரையின் சம்பவங்கள் ஒவ்வொன்றும் அதிவியப்பாக இருக்குமெனினும் மேற்கூறியவை இதின்பொது விலக்கணத்தை உணர்த்தப் போதுமாக இருக்கின்றன. இவைகள் தாமே பொய்க்கதைகளோவென ஐயமுறுவோர் அவைகளைத் தாம் கண்டதாகக் கூறும் பண்டிதர்கள் தங்களுக்குச் சமானமான சத்திய சுபாவமும் தருக்காதிநூல் வல்லமையும் உடையரோ அலரோ என நிர்ணயித்துக் கொள்ளல் வேண்டும். அப்படியும் நம்பிக்கை பிறவாமல் தாங்க ளொழிய மற்றியாரும் ஏமாந்து போகத்தக்க எளியோரென மதிப்போர்க்குப் பிரசித்த வசீகரர்கள் இருக்கும் இடம் சென்றோ அல்லது வரவழைத்தோ தம் ஐயம் தெளிந்து கொள்ளுதலன்றி வேறு மார்க்கமில்லை. யாரையும் இவ்வித சந்தேகத்திற்கு உட்படுத்தும் வியப்பு இத் தோற்றங்களுக்கு உளதென்பது மெய்ம்மையே. அது நூலறிவுடைய வசீ

---

* Mind Vol. IX, page 119.

† Do. do. page 115.

‡ Alert, Intermediate and Deep. Vide: Mind Vol IX. page 111

கார், தாமே ஒப்புக்கொள்ளும் விஷயம். பொதுவாக இந்நித்திரா விசேடங்களை அங்கீகரிப்போர் யாவரும் இவை நன்ருய் ஆராயத்தக்க தோற்றங்களென விசாரணையில் வைத்திருக்கிருர் களே யொழிய அவற்றின் காரண காரியசம்பந்தம் இன்னபடி யென்று துணிபவர் சுருங்கும். எந்த வழியாய் ஆராயவேண்டும் என்பது கூட அவர்க்குள் நிச்சயப்பட்டதாயில்லை. மின்மயாதி சத்திநூலில் பழகினேர் இது ஒருவகைக் காந்த சக்தி யெனவும், சாரீர நூலில் சார்புடையோர் நாடி விகாரங்களெனவும், மனே சாஸ்திரம் உணர்ந்தோர் சங்கற்ப விசேஷமெனவும் கூறி அந்த அந்த நூல்வழி தொடர்ந்து விசாரணை செய்யவேண்டுவதாகத் தமக்குள் விவாதம் செய்துவருகின்ருர்கள். ஒருபுறம் உடலும் மறுபுறம் உளமும் கலத்தலால் இருவழியும் சோதனை செய்ய வேண்டியதான ஒரு விசேஷ நிலைமையெனக் கொள்ளுபவரும் சிலர் உளர்.

இப்படியே நாளிதுவரை ஆராய்ந்த ஐரோப்பு நூல் நியமங் களுக்குள் அகப்படாமல் சோதனைக்குரித்தாய் நிறுத்தியிருக் கும் சங்கதிகள் இன்னும் பல உள. சாதாரண நித்திரையிற் சிலர் எழுந்துநடந்து, விழித்திருக்கும்போதும் செய்கிறதற்குக் கூடாததான மதிலேறல், மதிலின்மேல் நடத்தலாதி பல அரு மையான தொழில்களை மிகச் சுலபமாய்ச் செய்து முடித்தலும், ஒருவன்ருனே சொப்பனத்தில் ஒரு புருடனும் சாக்கிரத்தில் வேறு ஒருவனுமாக நாடோறும் பவித்து விவகரித்தலும் ஆதி யான அற்புதங்களுக்கு இடந்தரும் 'சஞ்சாரநித்திரை' என்று பேர்பெற்ற தோற்றமும், தூரதேச சமாசாரங்களைக் கரணங்க ளின் யாதோர் உதவியுமின்றி அறிதல்* அன்னியரின் மனேநிலை மைகள் அவர்கள் கூருதுணர்தல் ஆதியாகச் சிற்சிலர் ஆங் காங்கு நிராக்ஷேபமாக மெய்ப்படுத்தியிருக்கும் விஷயங்களும் பிரஸ்தாப சங்கதிக்குச் சம்பந்தப்படுபவை யாயினும் அவைகளை எடுத்து விரிப்பதற்கு இவ்விடத்தில் சாவகாச மில்லாமையால் முற்கூறிய வசிகர நித்திரா விஷயங்களுடன் இவற்றை ஒப்பிட்டு நோக்குவோர்க்கு இவைகளின் உண்மையும் இயல்பும் தாமே விளங்குமென விடப்படுகின்றன.

இப்படி ஐரோப்புநாட்டு மகாபண்டிதர்களால் பரீக்ஷை பண்ணி மெய்ப்படுத்தியிருக்கும் வசிகரநித்திராதி அருந்தோற்றங்

* For Example, Swedenborg's Seership as attested by Kant.

களுடன் நம்முன்னோர் நூலில் எங்கும் விரிந்துகிடக்கும் 'யோக' சம்பிர்தாயங்களைச் சரிநோக்கிச் சிந்திக்கில் இவைகளை அசம்பவம் எனக் கருதிப் பரியாலோசனைக்கே இடங்கொடாதிருக்கும் சில கல்விமான்களின் கொள்கை உஜிதமென வருவதன்று. யோகமென்பது பொதுவாய் ஒன்றுதல் என்னும் பொருளுடையதாய் மனுதிதத்துவங்கள் யாதேனும் ஒரு குறிப்புடன் சிற்சில பக்குவானுசாரமான பழக்கத்தால் ஒன்றி யடங்கலுக்குப் பெயராக வழங்குகின்றது. "பற்றுவன வற்றிடு நிராசை யென்றொரு பூமி பற்றிப் பிடிக்கும் யோகப், பாங்கிற் பிராணலய மென்னு மொரு பூமியிவை பற்றின்மனமறுமென்னவே"* இந்நாட்டுமகான்கள் பரம்பரையாய்த் துணிந்துவரும் இயல்புபற்றி யோகமானது 'ஞானயோகம்' 'கருமயோக' மென இருகூறாக வகுக்கப்படுகின்றது. இச்சாத் தியாகத்தால் வாசனையற்ற மனம் தானே ஒய்ந்து அடங்கி லக்ஷியங்களுக்கெல்லாம் லக்ஷியமான சர்வபூதாந்தராத்மாவோடு இரண்டற அருள்வழிநின்று கலக்குந் தன்மைக்குக் கருவி கரணங்களின் செய்கை யாதொன்றும் இல்லாததினால் முற்கூறிய மனோநாசத்திற்கு ஞானயோக மென்வும், சிற்சில புருஷப்பிரயத்தினத்தால் சாதிக்கத்தக்க மற்றெல்லாவகை மனோலயத்திற்கும் கருமயோகமெனவும் பெயர். சிறப்புநோக்கிக் கருமயோகமே யோகமெனப் பொதுப்படக் கூறலுமுண்டு. இதற்கு அஷ்டாங்கயோகமெனவும் சொல்லுவர். இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பவை யோகத்திற்கு உபகரணங்களாகக் கூறப்படும். இவற்றுள் இயம நியமங்கள் புண்ணிய பாவ விவேசனம் செய்யும் தருமசாஸ்திரப்படி நடக்கும் சன்மார்க்கத்தா லுண்டாம் புறக்கரண அகக்கரண சுத்திகளைக் குறிப்பிக்கின்றன. இவை யோக கலை பழகுவோர்க்குமன்றி உலக வாழ்க்கையுடையோர் யார்க்கும் பொருத்தம். ஆதனம் என்பது சலனமற உடலை நிறுத்தற்குள்ள உபாயம். இதினிமித்தமே தகுதியான இடங்களும், மூக்குநுனி முதலிய சில ஸ்தானங்களிற் பார்வைபதித்தலும்†

---

* தாயுமானவர்.

† "வருத்தமாயுடலவாதையைப்பற்றுமனமதுநடுநடுங்கிட்டுப்
பொருப்பினிற்குகைகள்புண்ணியதேசங்கோயில்கணதிகளின்கரைக

P. T. O.

விதிக்கப்படுகின்றன. இவையாவும் சித்தேகாக்கிரியத்துக்கு எவ்வளவு உசிதமானவையென்பது வசீகரநித்திரை வரவழைக்கும் மார்க்கங்களோடு ஒத்து நோக்காதார்க்கும் விளங்கக் கூடியதே. அவ்வளவு எளிதாயில்லை மூன்ருவதான பிராணுயாமத்தின் முறையும் பயனும் உணர்தல். பிராணன் என்பது உச்சுவாச நிச்சுவாசப் பொருளாயிருக்கும் வாயு எனவும், அதனை நிரோதித்தல் பிராணுயாமம் எனவுங் கூறல் வழக்கம். ஆனுல் 'ஆஞ்ஞா சக்கர' மென்ற யோக சமிஞ்ஞையையுடைய தலை மூளை முதல் 'மூலாதாரம்' என்று பெயர் படைத்த வீணுத்தண்ட விறுதிவரை நிற்கின்ற நடுநாடியூடும் அதினின்று பிரிகின்ற நாடிமண்டலம் முழுதும் இவ்வாயு சஞ்சரிப்பதாய்ச் சொல்லுவதினுல், அது நாம் உட்கொண்டு வெளிவிடும் உயிர்ப்போ அல்லது நாடிவிகார சத்தியென இக்காலத்தார் கூறும் சத்தி விசேடமோ என்று ஐயுறல் கூடாததன்று. அஃதெப்படியாயினும் ஆகுக. பிராணுயாமம் ஆரம்பிக்குங்கால் சுவாச பந்தனத்தோடு துவக்கலும் அதின் பிரயோஜனமாக ஏதோ ஒருவாறு நாடி விகாரசத்திக்குப் பேதகதி நேரிடுவதாக முடிதலும், யோககலையின்படி பிராணுயாமத்தின் தன்மை என்பதற்குச் சந்தேகமில்லை. இதனை "மந்த முத்தம மத்திமம்" என்று மூன்ருக்கியும் "சந்தமுற்ற சகற்ப வகற்பம்" என்றிரு பிரிவாக்கியும், பின் ஒவ்வொன்றிற்கும் ரேசக பூரக கும்பகமென்று மூன்று தொழில்வேறுபாடாக விகற்பித்தும் கூறி அத்தொழில் நன்கு முடிவதற்கு நாடி சுத்தியும் அதன்பொருட்டு மந்திரோச்சாரணுதி அனுகரணங்களும் எடுத்து விரித்துரைத் திருப்பினும், மற்றக் கலாசங்கேதங்கள் போலவே இக்கலை பயில்வோர்க்கல்லது இவை இன்ன இன்னவென விளங்குதல் அரிது. பழகுவதற்கோ சில பக்குவ நிய

---

ளிருப்பருமனை தானூர்வதுகடிப்பதின் றியேகாந்தமாயுள்ள
வொருத்தருயறியாவிடத்திலேயென்னையுன்னுவான்மனமொருப்படு
வான்."—ஈசுரகீதை.

"தலையுங்கழுத்துமுடம்புமிவைசெவ்வேதளராதேயிருக்கு
நிலையிலிருந்துகண்களைத்தன்மூக்குநுதிமேலேநிறுத்தி
யலையுங்கடல்போற்காமமுமெய்ப்பயமுந்தன்னைவிட்டகல
வுலையுமனமுள்ளடக்கியெனையுணர்ந்தேயிருப்பதுயோகம்."-பகவற்கீதை.

மங்களும் தொட்டுக்காட்டும் குருவின் அருளும் * வேண்டுமென் பர். ஆனுல் வசிகர நித்திரைதானும் யார்க்கும் வராமையும், வசீகரன் வேண்டுந்தன்மையும் கவனிக்கில், இதனை மூக்கிறை யன் கதையோவெனச் சிலர் ஐயுறல் அயுக்தமென்று வெளியாய் விளங்கும். இப்பிராணுயாமத்திற்குப் "பாரினைவிட் டெழவுட லங் கம்பித்தல் வெயர்வரும்பல்" என்பன வெளிக்குறிகளாகக் கூறுவதும் ஆச்சரியமானதன்று. சில காயசித்திகள் இதனுல் வரும் என்ற அபிப்பிராயம் ஆங்காங்குக் காணப்படினும் "வாயு வடங்கிட மனமடங்கிடும்" என்பதே பொதுவான கொள்கை. ச-ம் அங்கமாகிய பிரத்தியாகாரத்திற்குச் சில பொருட்பேதங் கள் நூல்களுள் காணப்படினும் அது பொதுவாக ஐம்புலன் அடக்கல் என வெளியாகின்றது. வசிகர நித்திரையின் சம்பவங் களை ஆலோசிப்போர்க்குப் பிராணுயாமத்திற்குமேல் பஞ்சேந் திரியங்கள் அடங்குமென ஒப்புக்கொள்ளுதல் அரிதன்று. அப் படியே தாரணையென்பது அகக்கரணங்கள் ஏகாக்கிரப்படு தலைக் குறிப்பிக்கின்றது. இதற்கு நாடி மண்டலத்தை ஆறு கூருக்கி ஒவ்வொன்றிற்கும் வடிவம், அதிஷ்டான தேவதை முதலியன கற்பித்துச் சில நாடிவிகார சத்திகளோடு சிற்சில தொழில் செய்யவேண்டியதாகக் கூறுவதெல்லாம் பாவனு விஷய மென விளங்கினும் அவற்றின் உத்தேசம் வெளிப்படுகிறதில்லை. மனம் ஒருவழி பதியும்பொருட்டு ஒவ்வொரு பாவனை கூறியதோ வென்பது இக்கலை பயின்றே அறியவேண்டியதாக நிற்கின்றது. ஆனுல் மனதார அறிந்து செய்யும் பாவனைகளென விளங்குகிற மட்டும், கூறிய நாடிமண்டலப்பிரிவும் அவற்றின் வடிவம் முத லியனவும் சாரீர சாத்திர உண்மைகள் அல்லவென முடியினும் யோககலைக்கு அது வழுவாக வருவதன்று. இவ்விதம் ஒரு முகப்

---

* "ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேகுங் குதிரைமற் றென்றுண்டு
மெய்யர்க்குப் பற்று கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் தள்ளி விழுத்திடுந் தானே."

"ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறிவா ரில்லை
கூரிய நாதன் குருவினருள் பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே".

—திருமூலர் திருமந்திரம்.

பட்ட மனதினால் சிற்சில மூர்த்தங்களையும் ஒலி, ஒளி முதலிய வற்றையும் தானாகப் பாவித்து அவைக் கியன்றபடி சித்தத்தை விரித்து நிற்றல் எ-வது அங்கமாகிய தியானம். வசீகர நித்திரையில் வசீகரனது சங்கற்பத்தோடு உள்ளம் தாதான்மியப்படுதலை இத்தியானத்திற்கு உவமையாக மதிக்கலாம். இத்திசையில் ஒலி கேட்டல் முதலியவற்றிற்குத் தனது சங்கற்பமும், வசீகர ஸ்தானம் வகித்திருக்கும் யோக குருவின் சங்கற்பமும் போதுமான காரணங்க ளாகாவிடில், முன் அங்கங்களால் நேரிட்டிருக்கும் நாடி விகாரங்களே காரணமாகத் தகும். கடைசியாய்க் கூறும் சமாதி, வசீகர சுழுத்தியோடு மிகவும் ஒற்றுமை யுடையது. தியான மூர்த்தங்களோடு அகக்கரணங்கள் தாதான்மியப் பட்டுச் சமாதியில் முற்றிலும் ஒடுங்குகின்றன. இவ்வவஸ்தையில் உடலுக்குண்டாம் யாதொரு நோவும் தோற்றுவதன் றென்பது சற்றும் அற்புதமன்று. நெடுங்காலம் சலனமற்று உணவு முதலியனவின்றி இச் சமாதியில் நிலை நிற்கக் கூடியதென்று பிரத்தியக்ஷானுபவமாக ஆங்காங்குச் சிலர் கூறுவதை நம்பாதார்க்கு, வேனிற்காலம் முழுதும் உணவின்றி உயிரற்றவைபோலச் சலனமற்று உறங்கும் தவளை முதலியவே சான்றாக நின்று தேற்றுக. இப்படிப் பார்க்கும்போது யோககலை கூறும் அனுஷ்டான மார்க்கங்களும் அனுபவங்களும் அருமையாயினும் அசாத்தியமும் சோதனைனர்ஹமும் அல்லவென வெளியாய் விளங்கும்.

மேல் இவ் அஷ்டாங்க யோகத்தால் அடைவதாகக் கூறும் சித்திகள் பிரதம திருஷ்டியில் சுபாவ நியம விபரீதங்களாகத் தோற்றலாம். இந்நாட்டு நூலோர் அபிப்பிராயப்படி அணிமா முதல் வசித்துவம் ஈறாகக்கூறும் அஷ்டசித்திகள் மாத்திரம் அல்ல யோகத்தால் அடையக் கூடியன; யோகத்தால் ஆகாதன இல்லையென்றே* அவர் துணிபு. ஐந்தவித்தார் ஆற்றலுக்கு மேற்பட்டன இல்லை. யோகமதத்தை இழித்துக் கூறும் இந்நாட்டு ஞான நூலோர்க்கும் இது சம்மதம். இவ்வித யோகசித்திகள் எவ்வளவு உண்மையுடையன என்பது சோதனையாலேயே வெளிப்

* "எப்பணியு மகன்றிடுமெவ் வினையுமறுஞ் சித்தியெலா மெய்துமோங்கு
முப்புவனத் தினும்பெறுதற் கரியபொரு ளொன்றுமிலை முடிக்கவேண்டி
லப்பிரமா தியர் செயலு மரைக்கணத்தின் முடித்திடலா மாதலாலே
யொப்பரிய யோகமத மிதுபோலப் பிறிதொர்மத முண்டோவென்றான்."
—பிரபோத சந்திரோதயம்.

படத் தகும். இவற்றுள் அதிசயோக்தி வசனங்கள் கலந்திருக்கக் கூடியதே. அணிமா முதலியவற்றிற்குச் சில பொருள் வேற்றுமை காண்டலும் இவ்வையத்திற்கு அனுகூலப்படலாம். ஆயினும் இச்சித்திகளை முற்றும் பொய்யென இகழ்ந்து சோதனை செய்யாது விடுத்தல் மாத்திரம் கோட்டமற்ற சிந்தையர்க்குக் கூடாத கொள்கை. யாதொரு பக்குவ விசேடமும் இல்லாத சிலருக்குத் திடீரென்று ஒரு வசீகரன் உண்டுபண்ணின நித்திரையால் நெடுங்கால மிருந்த * நேத்திர ரோகமுதலிய பல வியாதிகள் இன்னவழி போனதென்று அவ் வசீகரனும் திடுக்கிட நீங்கின என்னும் சத்திய வாஞ்சையுடைய உத்தம சாக்ஷிகளின் வாய்மொழிகள் இருக்க, இயற்கையான பக்குவமும் நெடுங்காலம் தன்னையே வசீகரித்துப் பழகின அசாதாரண சாமர்த்தியமும் உடைய யோகிக்குப் பிணிநீங்கித் திடகாத்திரம் பவித்தலோ ஆச்சரியம்? அங்கவியாபாரத்தால் விளையும் நரை திரை மூப்பு அவ் யோகிக்கு நீங்கலும் என் அசம்பவம்? யாதொரு இயற்கை செயற்கையான பக்குவமும் இல்லாத ஒருவன் சஞ்சார நித்திரையில் ஏகாக்கிரப்பட்டிருக்கும் சித்தத்தால் அசாதாரணமான செய்கைகளைச் செய்யக் கூடுமேயானால் எவ்வளவோ வருந்தி அஷ்டாங்க யோகம்பயின்று ஜிதேந்திரியனான யோகிக்கு அவற்றிலும் வியப்பான சில செய்கைகளைச் செய்தல் அசாத்தியமோ? யாதொரு நியமானுஷ்டானங்களும் அறியாத ஒரு வசீகரனுக்கு இல்லாதன உள்ளனவாகவும் உள்ளன இல்லாதனவாகவும்† புரட்டி ஐம்புலனுக்கும் இசையக் காண்பிவிக்க ஏலுமானால், கரணசுத்தியுடையயோகிக்கு ஏன் இது கூடாததாகும்? இவ்வசீகரவித்தையே ஒருபடி அதிகரிக்கில் சாபானுக்கிரக சக்தியாக ஒருவாறு பவிப்பதற் கென்குறை? கல்லாகக் கற்பிக்கப் பட்ட ஒருவனது ‡ வசீகர நித்திரை நீடித்திருக்கில் அகலியையின் அனுபவம் அதைவிட வேறென்னை? மற்றையர் கண்ணுக்குக் கல்லாகக் காண்டல் இல்லையாயினும் தன்மட்டுக்கும் வசீகர நித்திரையிற் கல்லாகக் கற்பிக்கப் படுதலும் யோகபலத்தால் கல்லாக சபிக்கப்

* Mind Vol. X, page 488.

† "The hypnotic hallucination of the somnombulistic stage is complete: in the absence of a suggestion to the contrary, it engages all the senses."—Mind Vol. IX, page 424.

‡ Mind Vol. IX, page 115.

படுதலும் ஒன்றே என்பதற்குத் தடையுண்டோ?* வசீகர நித்திரையில் அவ்விதம் கற்பிக்கப்பட்டோர் பின் அங்நிலை விட்டு நீங்குவரே யென்னின் அப்படியே சபிக்கப்பட்டவரும் சாப விமோசனமடைதல் நியமமாகவே யிருக்கின்றது. சபிக்கப்படும் காலையில் அச்சாபத்துடனே சாபநிவர்த்தியையும் கூறுதல் வழக்கமன்றோ? அது வசீகர நித்திரையில் ஏற்றும் சங்கற்பம் வசீகரனல் நிவர்த்தியாவதற்கும் அச்சங்கற்ப காலையிற்றனே இன்னபோது இச்சங்கற்பம் ஒழிகவென்று வசீகரன் கூறில், அப்படியே கூறிய காலையில் சங்கற்ப நிவர்த்தி வருவதற்கும் மிகவும் பொருத்த முடையதே. வசீகரனுடைய சங்கற்பங்கள் அங்நித்திரையிற் படுபவருக்கு அனுபவமாவதுபோல மற்றவ ருக்கு ஆவதில்லை யென்பது உண்மைதான். யோகபலனுக்கும் வசீ கர வித்தைக்கும் இஃது ஒரு பெரும்பேதமே. ஆயினும் யோகி யின் சங்கற்பத்தாற் கல்லாக உளம் மாறுபட்ட ஒருவனைப் பார்ப் பவர்களும் அவனைக் கல்லாகவே காணவேண்டுமானல், அவர் களையும் அவ்யோகி தனது சங்கற்ப பலத்தால் வசீகரித்துத் தன் சங்கற்பத்தோடு இசைவாகப் பார்க்கும்படி செய்தான் என்று சொல்லலாம். அப்படித் தன் கண்ணுக் ககப்பட்டவர்களையும் அகப்படாதவர்களையும் யோகிக்கு வசீகரிக்கும்படி யேலுமோ வெனில், தூரத்திருக்கினும் முன் பழக்கமுள்ள சிற்சிலரை வசீ கரரில் சிலர் வசீகர நித்திரையில் வீழ்த்துவர் என்ற * ஒரு சங்கதி அதற்கு அனுகூலமாக நிற்கும். ஆனல் அப்படியெல் லாச் சீவர்களையும் ஒரே சங்கற்பத்தால் மயக்கித் தனது சங்கற் பப்படி இல்லாத ஒன்றை அவர்கள் ஐம்புலன்களுக்கும் நியதமா கத் தோற்றுவிக்கக் கூடுமானல் அத்தொழிலுக்கும் ஜகத் சிருஷ் டிக்கும் பேதம் காண்பதரிது. இவ்வித வல்லபமே அஷ்ட சித்திகளில் ஈசத்துவம் எனக் கூறப்படுகின்றது. இஃது அதிச யோக்தி வசனமோ அன்றோ என்பது சோதனையினலேயே விளங்கவேண்டும்: மனக் கணக்கிட்டு வெறும்வாய் மென்று உண்டு இல்லை என வாதித்தல் எவ்விஷயத்திலும் பயனுடையதன்றே! கூறிய இவ்வீசத்துவத்திற்கு வசீகர நித்திரையின் யாதொரு சாக்ஷியமும் அகப்படாமையே யதின் இல்லாமைக்குக் காரண மாக மதிக்க வேண்டுமானல்; யோகப்பயிற்சிக்கும் வாளாதிரியும்

---

* Mind, Vol. XII.

ஒருவன் செய்யும் வசீகர நித்திரைக்கும் வேற்றுமை இல்லை என்பதும் வசீகர நித்திரையின் சம்பவங்களை நாம் வரையறுத்து அறிந்துகொண்டோம் என்பதும் ஒப்புக்கொள்ள வேண்டியதாய் நிற்கும். இவ்விரண்டும் யாவருக்கும் சம்மதமாய் வரா. அப்படியே துணிந்து இவ்வீசத்துவம் விசாரணைக்கு யோக்கியதை இல்லை எனத் தள்ளினும் தள்ளுக. அதனால் யோககலையும் பரிசோதனுருகம் அன்றென வரவேண்டுமோ? அவ்வளவே பிரகிருதத்தில் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு ஆவசியம். இயற்கையாகிய சில பக்குவவிசேடத்தோடு ஏதோ ஒருவழி பயிற்சியும் பொருந்த சிற்சிலருடைய கரணகருவிகள் சாதாரண கதியிலிருந்து மாறுபட்டு வியப்பான பல தொழில்களைச் செய்வது கூடியதென்றும், அவ்வித செய்கைகள், நாம் கண்டறிந்திருக்கும் நியதசாஹசரியங்களுக்கு விபரீதமாகப் பிரதமதிருஷ்டியில் தோன்றுவதால், மனம் போனபடி, 'தாடிகொண்டு வீடுகட்டுதல்போல்' நாமாகச் சங்கற்பித்துக்கொண்ட ஜகத் சுவபாவ விருத்தமாகக் கருதி, அசாத்தியம், பொய், புரட்டு என அவைகளை இகழ்ந்து தள்ளுதல் தவறென்றும் யோககலையின் முறைமையும் பயனும் வசீகர நித்திராதி அருந்தோற்றங்களுடன் ஒத்து நோக்கில், அவை நன்றாய்க் கவனித்து நூற் கிரமமாய்ச் சோதனை செய்யத் தக்கவையே யென்றும், ஒப்புக்கொள்ளுதல் இவ்விடத்திற் போதுமாக நிற்கும். இவ்வளவேயன்றி அஷ்டமாசித்தியாதியான எவற்றையும் ஒன்றும் ஒழியாது அங்கீகரிக்கவேண்டுமென்று சாதித்தல் கருத்தன்று.

இவ்விதம் யோககலைகளின்மேல் சில கல்விமான்களுக்குள்ள விபரீதபாவனை நீங்குமேயானால் அதனால் விளையும் நூற்பயன் அனந்தம். ஒரு சிறு பூச்சியின் சிறகில் இருக்கும் புள்ளிகள் எத்தனையெனக் கண்டறிய மலை கடல் காடு முதலியன கடந்து பெருந்துய ருழன்று, தம் பெண்டு பிள்ளை முதலிய உரியோரையும் மறந்து, தம் அருமையான வாணாளையும் பொருட்டாய் நினையாது பல வருடம் சஞ்சரிக்கும் ஐரோப்பிய மகான்கள், யோக கலைகளுக்கும் வசீகர நித்திராதி விஷயங்களுக்குமுள்ள ஒற்றுமை நோக்கி அவற்றுள் சத்திய புத்திசெய்து நூல் ரீதியால் ஆராயத் தலைப்படில் அவருடைய கூரிய மதிக்கும் விடா முயற்சிக்கும் எதிர்நிற்கத்தக்க இருள் யாது? அவர்கள் யோககலைகளில் வைத்திருக்கும் மித்தியா திருஷ்டிநீங்கும் காலமே அக்கலைகளைச் சூழ்ந்

துநிற்கும் அந்தகாரத்தின் விமோசனகாலம்போலும்! இக்கூறிய யோககலைகளை ஆராயும் நூல்களில் வசீகர நித்திரை, சஞ்சாரநித்திரை, பிறர்நினைவறிதல் ஆதியான அற்புதத் தோற்றங்களும் அசாதாரண மனோநிலைமைகள் யாவும் விசாரணைக் குரியனவாக நிற்கும். சூ—த்திரம், ஜோசியம், மந்திரம், ஆவேசம் முதலியவற்றில் யாதேனும் உண்மைகள் உளவேல் அவற்றையும் ஆராயத்தக்க இடம் இக்கலைநூல்களேயாம். எதைப்பற்றியேனும் ஆய்தல் யார்க்கும் பழியன்று: ஆய்தற்குரிய "ஆள்வினையின்மை பழி."

௩௭. ஆனந்த மேயுரு வாக்கிடும் ஞான
யோகமும் யோகத் தொருநற் கலையே.

யோகமானது கருமயோகம் ஞானயோகமென்று இரு கூறாயினும் முன்னதற்கே சிறப்புநோக்கி அப்பெயர் உரித்தாமென மேற் கூறப்பட்டது. ஞானயோகத்தின் இலக்கணம் நன்றாய் ஆராயுங்கால் அதனை யோகவகுப்புள் ஒரு 'நற்கலையெனப்' பாராட்டல் உசிதமாகத் தோற்றும். கரும யோகமானது சாதாரண கலைபோலப் பரம்பரையாய் இன்பத்திற்குக் காரணமாவதல்லாமல், சித்திரம் கீதம் முதலிய நற்கலைகளை ஒத்துத் தானே ஆனந்தகரமாவதன்று. அஷ்டமா சித்தியுடையோர் அவற்றால் சுக மடைதல் யந்திராதி கைத்தொழில் பழகுவோர் அடைதல் போலவேயாம். ஞானயோகம் பழகுவோர் அந்த ஞானயோகம் தமக்கு அரைக்கணமாயினும் * கைகூடில் ஒப்புயர்வற்ற பேரானந்தம் அநுபவிப்பதாகவும் இப்பேரானந்தத்தைத்தவிர அவர் வேறு பிரயோஜனம் யாதும் கனவிலும் கருதாததாகவும் இருப்பதினால் சங்கீதாதி நற்கலைகளோடு ஏகதேச உவமைநோக்கி இதனை 'யோகநற்கலை' யெனக் கூறுதல் தகுதியாக இருக்கின்றது.

---

* "சுட்டுப்போ தங்கழன்ற சுத்தமரை மாத்திரையின்
மட்டுத்தா னற்றநிட்டை வாய்க்குமேற் - கெட்டேன்
றலைச்செய்யு மானந்தஞ் சற்றோ பால்வாரி
மூலைக்கண்ணிற் றோன்று முறை." —ஒழிவிலொடுக்கம்.

"ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்ல வென்று
போனாலும் யான்போவ தல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன்." —தாயுமானவர்.

கருமயோகத்திலும் அமிர்தபானம் முதலிய சுகானுபவங் கூறப் படினும் அஃது கருமயோக முடிவில் மனோலயம் வருதலில் உண்டாம் சுழுத்தியானந்தம்போன்ற ஒருவித சுகாபாசமே யொழியத் தடையற்ற பேரானந்தம் அன்றெென இருமையும் பழ கினோர் கூறுவர். * அஷ்டமாசித்திகளே கருமயோகத்தின் தலைமையான பயன். அவ்வித சித்திகளை ஞானயோகியர் யாவரும் "இரும்பின் சுவர் கரும்பின்கோலால் இடந்து விரும்பித் தவி டெடுத்தலோ" † டொக்கும் என இகழ்வது வழக்கம். இம்மை மறுமைப் பயன்கள் யாவையும் கைவிடுதலாகிய இச்சாத்தியாகமே ஞானயோகத்திற்கு முக்கிய சாதனம். ஆனதினால் ஞான யோகத்திற்குங் கருமயோகத்திற்கும் முள்ள பலோத்தேசத்தின் வேறுபாட்டால் பொதுக்கலைகளுக்கும் நற்கலைகளுக்கும் உள்ள வேற்றுமை அவை இரண்டிற்கும் சித்திக்கின்றது.

அனுஷ்டான மார்க்கங்களிலும் அப்படியே பெரும் வேற்றுமையுளது. இயம நியமாதி அங்கங்கள் இரண்டிற்கும் கூறுவ துண்டெனினும் கருமயோகத்திற்கு உரித்தான பிராணயாமம் முதலுள்ள அங்கங்களுக்குப் பேரொற்றுமையன்றிப் பொரு ளொற்றுமை இல்லை. அவற்றை இவ்விடத்தில் விவரிப்பது அனாவசியம். பொதுவாய் ஞானநிஷ்டையை அடைய விரும்புவோர் சகல இச்சைகளையும் வேரறுத்தலே குறியாக நிற்பர். "இச்சை யாம் விறகுமாண்டால் எண்ணமாம் வன்னிமாயும்" ‡ என்பது அவர் துணிபு. சத்கருமங்கள் ஈசுரோபாசனை முதலியவற்றை அவர் செய்தலும் இச்சாநிவர்த்தியின் பொருட்டே.§ இதனையே நிஷ்காமிய தபசென்றும் சொல்லுவர். இப்படிப் பரிசுத்தமாகிய உள்ளத்தோர்க்கு இச்சாநிவர்த்தி உண்டாய் மனோலயம் அடை யுங்காலைப் பரம்பொருளின் அருள் உதயமாகி அவர்கள் தற்போ தத்தையுண்டு பிரிவற விளங்கி ஆனந்தமே அவர் வடிவமாகச் செய்கின்றது. இம்மார்க்கங்களில் சிற்சில மதபேதங்கள் உள

---

* "சுகாதீதம் வேண்டிற் ருெழில் செய்வோ மென்று
னகாரோ துயில்வார் நடந்தோ." —ஒழிவிலொடுக்கம்.

† அமிர்தசாரம்.

‡ ஞானவாசிட்டம்.

§ "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." —திருக்குறள்.

வெனினும் அவற்றுள் மொழிவேறுபாடன்றிப் பொருள் வேறுபாடில்லையென்பது அனுபூதிமான்களின் அவிரோத நிலைமை.*

## ௩அ. பேரறி வின்னருட் பிரேரக மாதலின் ஞானமு மதமுடி வாமென நவில்ப.

மேற்கூறியபடி மெய்ம்மை பொறுமை முதலிய சத்கருமானுஷ்டானத்தால் சுத்தீகரிக்கப்பட்ட உள்ளம் பற்றற நின்று சொரூபநாச மடையுங்கால் நேரிடுகின்ற நிருபதிக ஞானனுபூதி புருஷப் பிரயத்தினத்தினுல் அடையக்கூடியதன்ருய் நிற்குந் தன்மையைக் கவனிக்கில், நூல்களுள் முதலாக நிறுத்திய மத நூல்வழிக்கும் இறுதியாகக் கூறிய ஞானயோக மார்க்கத்திற்கும் உள்ள பொருத்தம் தானே விளங்கும். ஜக தாதாரப் பரம் பொருள் ஒன்றுண்டெனுந் துணிவுடன் அப்பரம்பொருளின் அருட்பிராசாதத்திற்குரிய வழிகளைச் சோபானக் கிரமமாக வகுத்து விதிவிலக்காகப் பிரதிவாதிப்பது மதநூலிலக்கணம் எனக் கூறினேம். ஞானயோகமோ அவ்வித அருட்பிரசாதத்தால் சாத்தியமாவதாக இங்குக் காணப்படுகின்றது. ஆனதினுல் தற்போத முயற்சி யுள்ளளவும் இரண்டும் ஏகசாதனத்தையே குறிப்பாக உடையன. இப்படிச் சாதன ஒற்றுமையன்றிச் சாத்தியத்திலும் அவையிரண்டும் ஒரு முடிவுடையன என்பது மதமார்க்கங்களை உண்மையாய் அனுஷ்டித்து அருட் பிரசாதம் பெற்ற மகான்களும் ஞானயோகத்தால் பிரம சாக்ஷாத்காரமடைந்த ஜீவன் முத்தர்களும் ஒன்றுபோலவே தம் அனு

---

* "எம்மதத் தோரெவ் வகைகிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போத மாய்க்குமே லுந்தீபற." —அவிரோதவுந்தியார்.

"கயிற்றாவுங் கட்டையினிற் கள்ளனும்போன் மாயா
மயக்கமற்ற வேதாந்த வாழ்வு - முயற்சிகெட்ட
வானந்தா தீதத்தே யாணவரா மாகமமுந்
தானந் தினூர்க்குச் சமன்." —ஒழிவிலொடுக்கம்.

"குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத
மற்றவர்கட் குற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ."—தாயுமானவர்.

'வேதாகமங்கள்சொன்னபொருண்மெய்யேயறிவார் போன்றிருந்து[பாணி.
பேதாபேதஞ்சாதிக்கும் பெரும் பேய்தனக்கும் வாரீரே."—அஞ்ஞவதைப்

பூதி நிலைமையை அவாங்மானச கோசரமாக வருணித்தலே வெளிப்படுத்தி விளக்கும்.* அவருள் இருவழியும் அறிந்

*"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினையி னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்ருந் திருப்பெருந் [துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற்பாரே."—திருவாசகம்.'

"நின்ற வொன்றை யுணர்ந்தேனுக் கதனுணேர்மை யதுவிதுவென்
றென்று மொருவர்க் குணரலாகா துணர்ந்து மேலுங் காண்பரிது
சென்று சென்று பம்பரமா யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென் றறிவரிதாய் நன்ருய் ஞானங் கடந்ததே."

"நன்ருய் ஞானங்கடந்து போய் நல்லிந்திரிய மெல்லாமீர்த்
தொன்ருய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்ருங் கின்ப துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்ருல்
அன்றே யப்போதே வீடதுவே வீடு வீடாமே."

—சடகோபர் 'திருவாய்மொழி'.

"எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே."

—பட்டினத்துப்பிள்ளையார்.

"போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவுமில்லா வொன்று வந்துவந்து
தாக்கு மனேலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
யாக்கும் அறுமுகவா சொல்லொணுதிந்த வானந்தமே."

—அருணகிரியார் 'கந்தரலங்காரம்.'

"மறைநான் முகனரன் வானவர் மயல் கொண்டின மயரப்
பொறையா முடலுள வாயுழல் புலையேன் பொருளாக
முறியாவெள முழுவின்பம் தருவாகிய முதல்வ
னறைகூவியென் னகமன்னிய வருடா னதிசயமே."

—தத்துவராயர் 'பாடுதுறை.'

"அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை
மறிந்த மனமற்ற மௌனஞ் - செறிந்திடவே
நாட்டினு னுனந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினுன் மோன குரு."

—தாயுமானவர்.

"இந்தநெறியில் விகங்கமதை யெய்தியானு மவனருளால்
பந்தமகன்று பரவெளியைப் பார்த்தேனனைத்துந் தானுகி
அந்தநடுமுன் மூன்றுமில்லா வகண்டாகார வடிவாகி
தொந்தமொன்று மிலதாகிச் சுயமாய்விளங்கி யிருந்ததுவே."

—குமாரதேவர் விஞ்ஞானசாரம்.

வெனினும் அவற்றுள் மொழிவேறுபாடன்றிப் பொருள் வேறு பாடில்லையென்பது அனுபூதிமான்களின் அவிரோத நிலைமை. *

ரு அ. பேரறி வின்னருட் பிரேரக மாதலின்
ஞானமு மதமுடி வாமென நவில்ப.

மேற்கூறியபடி மெய்ம்மை பொறுமை முதலிய சத்கரு மானுஷ்டானத்தால் சுத்தீகரிக்கப்பட்ட உள்ளம் பற்றற நின்று சொரூபநாச மடையுங்கால் நேரிடுகின்ற நிருபதிக ஞானனுபூதி புருஷப் பிரயத்தினத்தினல் அடையக்கூடியதன்ருய் நிற்குந் தன்மையைக் கவனிக்கில், நூல்களுள் முதலாக நிறுத்திய மத நூல்வழிக்கும் இறுதியாகக் கூறிய ஞானயோக மார்க்கத்திற்கும் உள்ள பொருத்தம் தானே விளங்கும். ஜக தாதாரப் பரம் பொருள் ஒன்றுண்டெனுந் துணிவுடன் அப்பரம்பொருளின் அருட்பிராசாதத்திற்குரிய வழிகளைச் சோபானக் கிரமமாக வகுத்து விதிவிலக்காகப் பிரதிவாதிப்பது மதநூலிலக்கணம் எனக் கூறினேம். ஞானயோகமோ அவ்வித அருட்பிரசாதத் தால் சாத்தியமாவதாக இங்குக் காணப்படுகின்றது. ஆனதினல் தற்போத முயற்சி யுள்ளளவும் இரண்டும் ஏகசாதனத்தையே குறிப்பாக உடையன. இப்படிச் சாதன ஒற்றுமையன்றிச் சாத்தியத்திலும் அவையிரண்டும் ஒரு முடிவுடையன என்பது மதமார்க்கங்களை உண்மையாய் அனுஷ்டித்து அருட் பிர சாதம் பெற்ற மகான்களும் ஞானயோகத்தால் பிரம சாக்ஷாத் காரமடைந்த ஜீவன் முத்தர்களும் ஒன்றுபோலவே தம் அனு

---

* "எம்மதத் தோரெவ் வகைகிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போத மாய்க்குமே லுந்தீபற." —அவிரோதவுந்தியார்.

"கயிற்றாவுங் கட்டையினிற் கள்ளனும்போன் மாயா
மயக்கமற்ற வேதாந்த வாழ்வு - முயற்சிகெட்ட
வானந்தா தீதத்தே யாணவரா மாகமமுந்
தானந் தினர்க்குச் சமன்." —ஒழிவிலொடுக்கம்.

"குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத
மற்றவர்கட் குற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ."—தாயுமானவர்.

'வேதாகமங்கள்சொன்னபொருண்மெய்யேயறிவார் போன்றிருந்து[பாணி.
பேதாபேதஞ்சாதிக்கும் பெரும் பேய்தனக்கும் வாரீரே."—அஞ்ஞவதைப்

பூதி நிலைமையை அவாங்மானச கோசரமாக வருணித்தலே வெளிப்படுத்தி விளக்கும்.* அவருள் இருவழியும் அறிந்

*"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினையி னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்ருந் திருப்பெருந்
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை [துறையுறை சிவனே
யறியகிற்பாரே."—திருவாசகம்.'

"நின்ற வொன்றை யுணர்ந்தேனுக் கதனுணேர்மை யதுவிதுவென்
றென்று மொருவர்க் குணரலாகா துணர்ந்து மேலுங் காண்பரிது
சென்று சென்று பம்பரமா யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென் றறிவரிதாய் நன்ருய் ஞானங் கடந்ததே."

"நன்ருய் ஞானங்கடந்து போய் நல்லிந்திரிய மெல்லாமீர்த்
தொன்ருய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்ருங் கின்ப துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்ருல்
அன்றே யப்போதே வீடதுவே வீடு வீடாமே."

—சடகோபர் 'திருவாய்மொழி'.

"எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே."

—பட்டினத்துப்பிள்ளையார்.

"போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவுமில்லா வொன்று வந்துவந்து
தாக்கு மனேலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
யாக்கும் அறுமுகவா சொல்லொணுதிந்த வானந்தமே."

—அருணகிரியார் 'கந்தரலங்காரம்.'

"மறைநான் முகனரன் வானவர் மயல் கொண்டின மயரப்
பொறையா முடலுள வாயுழல் புலையேன் பொருளாக
முறியாவெள முழுவின்பம் தருவாகிய முதல்வ
னறைகூவியென் னகமன்னிய வருடா னதிசயமே."

—தத்துவராயர் 'பாடுதுறை.'

"அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை
மறிந்த மனமற்ற மௌனஞ் - செறிந்திடவே
நாட்டினு னனந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினுன் மோன குரு." —தாயுமானவர்.

"இந்தநெறியில் விகங்கமதை யெய்தியானு மவனருளால்
பந்தமகன்று பரவெளியைப் பார்த்தேனனைத்துந் தானுகி
அந்தநடுமுன் மூன்றுமில்லா வகண்டாகார வடிவாகி
தொந்தமொன்று மிலதாகிச் சுயமாய்விளங்கி யிருந்ததுவே."

—குமாரதேவர் விஞ்ஞானசாரம்.

தனுபவித்து அவற்றின் அபேதத்தை வெளியிட்டிருக்கின்றவரும் அனேகருளர்.* தங்கள் தங்கள் மதானுஷ்டானங்களின் உட்கருத் துணரத்தக்க சித்தசுத்தியும் மனவிரிவும் இல்லாதவர்கள் தாம் நடத்திவரும் சடங்குகளையே மதக் கோட்பாட்டின் முக்கியப்பொருளாக மயங்கி அவைகளின் நிமித்தம் ஒருவரையொருவர் எதிர்த்து வீண் கூச்சலிட்டு ஓயாத சமயச் சச்சரவில் மூழ்குவ தல்லாது, எவ்வழியேனும் உழைத்து அருள்பெற் றுபசாந்தம் அடைந்த இந்நாட்டு அனுபூதிமான்கள் யாரும் தாங்கள் அறிந்த எம்மதத்தையும் ஆதரவாகவே பாராட்டுவது வழக்கம். மதவாதங்களில் வழக்காடுபவரைக் குறித்து அவர்கள் பரிதபித்து நொந்து கூறும் சமாதான மொழிகள்

---

* "சத்தாதி தத்துவம் போய்த் தானுமெதி ருங்கழன்றாற்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலே - முத்தி
யநிர்வசன மின்ப வதீதமெனி லாங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய்."

"சுந்தரனர் சேரர்கோன் சோழர் குறுமன்னர்
மைந்தருட நம்முடலே வாட்டினர்க - ளந்தமிலாப்
பத்தரொடு ஞானவை ராக்கியர் பலர்க்கு
மொத்ததுசார் போத வொழிவு."

—ஒழிவிலொடுக்கம்.

"வேதம்பல் பக்குவ மோர்ந்தொரு வீட்டினுக்
கோதும்பல் லாற்றானு முந்தீபற
உண்மைகண் டார்க்கேக முந்தீபற."

—அவிரோதவுந்தியார்.

"தற்போத மற்றவிடந் தற்பரங்கா ணம்மானே."

—திருவம்மானை.

"நாலாய நற்பதமு நல்ல வவுத்திரியு
மாலாய தந்திரமு மந்திரமு - மேலாய
சிற்போத வுண்மைத் தெரிசனமு மெல்லாமுன்
றற்போத நாட்டமெழத் தான்."

—சிவானந்தமாலை.

"வேத வாகமமுந் தீக்கை விதிகளுஞ் சரியையாதி
மேதகு பாத நான்கு மிகுபத முத்தி நான்குந்
தீதின் மாணவக மற்றுஞ் செப்பிய வனைத்துமுன்றன்
போதநீ ளுகநாதன் புந்திசெய் தமைத்த வாமே."

—வீராகமம்.

சற்றல்ல. * அப்படியே மறுநாடுகளிலும் பன்னூற்றுண்டுகளாக அத்தேசத்தார்களுடைய பக்குவ விசேடப்படி அவர்களைச் சித்த சுத்திபண்ணி உயர்த்தி வந்திருக்கும் மதங்களையும் இந்நாட்டுளோர் ஆதரவாகப் பரிசோதிக்கில் அவைகளும் சங்கேதமொழி வேறுபாட்டால் மாறுபடுவனவே யன்றி உண்மையாய்ப் பார்க்கில் ஞானயோக முடிவிற்குரிய யாதேனும் ஒரு அங்கத்துள் அகப்படாதொழியா. மனக்கோட்ட மற்றவர்க்கே யொழிய, மற்றையர்க்கு ஒன்றுக்கொன்று பகைபோல நடித்துத்திரியும் மதங்களின் உண்மையான நிலைமையும் அவற்றின் ஒற்றுமையும் விளங்குவதல்ல. எடுத்துரைப்பினும் பயன்படுவதன்று. உபசாந்த

---

* "சமையவாதி கடத்த மதங்களி
லமைவதாக வரற்றி மலைந்தனர்." —திருவாசகம்.

"யாவரு மெவையுந் தானு யவரவர் சமையந்தோறும்
தோய்விலன் புலனைந்திற்குஞ் சொலப்படா னுணர்வின்மூர்த்தி."
—திருவாய்மொழி.

"ஆறு ஞான முடையார் பிணக்கற
வாறு ஞான நெறியென் றறிந்தவர்
கூறு ஞானக் கரும்பு கொள்ளாதுபோய்க்
குருடர் சொன்னசொற் கோதுகொண் டாடுப."

"அலைகெட்டிராதுபல தலைகெட்டநூல்பழகியதுமுக்கியமாகமிகவே
கலைகற்றபேய்களொடு சிலுகிட்டுலாவுவனகரையற்றபேய்களுளவே."
—அஞ்ஞவதைப்பரணி.

"அமையக்கற் பதுவிட்டுச் சிலதர்க்கித் தமையாச்
சமையக்கத் ததுகத்தித் தலைமுட்டிக் கொளுமே."

"பொருதர்க்கப் பரபட்சச் சமையத்தைப் பொரவே
விருதிட்டுப் பொருதிட்டுத் தனைமெச்சிக் கொளுமே."

"அறவுரைகளவையெனவுமிவையெனவுமலகையுடனலகையிகலிச்
செறவுரைசெய்பலகலையிஞெலியினுயர்ககனமுடி செவிடுபடுமே."
—மோகவதைப்பரணி.

"ஒரோர்சமையத் துயிராய்ச் சிலபல வுண்டுசொன்னோ
மாராயின் முத்தியொன்றே யெனினெங்கு மதைவிரும்பித்
தோராம லெம்மதமிம்மத மென்றென்றிற் சிக்கியிந்தப்
பாரமீ துழல்வதென்னீர் தெளிந்தோர்செய்யும் பண்பிதன்றே."
—அருட்பிரகாசம்.

"வாதிக டங்களுக் கல்லான் மதங்களுக்
கோதார் வலியின்மை யுந்தீபற
ஓதி யுணர்ந்தோரென் றுந்தீபற." —அவிரோதவுந்தியார்.

முடையோரை உத்தேசித்து இயன்ற அளவு எடுத்தோதற்கும் நூலின் பொது இலக்கணம் கூறும் இவ்விடத்தில் அவகாசமும் ஆவசியமும் இல்லை. ஆயினும் "பத்தியாம் வலையிற்படும் பார் மிசை புத்தியா லறியொண்ணுப் புராணனே" (1) என்னுந் துணி பால் "கடுந்தகையே னுண்ணுந் தெண்ணீரமுதப் பெருங்கடலே" (2) என்று அருட்டாகங்கொண்டு "தன் கடன் னடியேனையுந் தாங்குதல்" (3) என்றியாவும் கைவிட்டுத் தன்னையும் ஜகத்தையும் மறந்து "அழுவதுவேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம்பலத் தரசே" (4) என அழுதரற்றி மனங்கரைந்து நெக்குநெக்குருகித் தம் எய்ப்பில் வைப்பாய் வரும் முழுமுதலின் பாதநிழலில் ஒய்வ டையும் பத்திமார்க்கத்திற்கும்;—பொய் களவு காமம் முதலியவற் ரோடு விடாப்போர்புரிந்து அவை கனவிலும் எட்டிப் பாராத படி விரட்டி உடல்பொரு ளாவியாகிய ஒன்றையும் மதியாது "வைதாரை வாழ்த்தினர்போன் மறந்தென்று மறக்கொடுமை, செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்" (5) என்னுந் தேர்ச்சியால் "தீயுடன் மேலுறுஞ் செயிர்க்கு" * நோவாது தம்மை "செற்றவர் மேலுறுஞ் செயிர்க்கே" நொந்து தனக்குத் தனக்கென வெழும் இச்சைகளை யெல்லாம் பரோபகார வழியிற் செலுத்தி "என்புமுடையார் பிறர்க்கு" (6) என்னும் அன்பு நிலையில் உபசாந்தமடைந்த தரும வீரர்களது கரும மார்க்கத் திற்கும்;—"கொலைகளவு கட்காமம் கோபம் விட்டாலன்றோ மலை யிலக்காய் நின்னருடான் வாய்க்கும்" (7) என்னும் உறுதியால் இயம நியமாதி பழகி, "பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்" (8) என்ன ஓர்ந்து, புறப்பற்று அகப்பற்ருகிய சகல இச்சைகளையும் நீத்து, அவை மேலெழாதவண்ணம் வாசனையையும் அவித்து, "நானே கருதின் வரநாடார் சும்மாவிருந்தாற், ருனே யணைவ ரிவர் தன்மையென்னே பைங்கிளியே" (9) என்றபடி அருள்வழி நின்று "தன்னையழித் தெழுந்த சச்சிதானந்தத்தை யுன்னி

---

* "கற்றவரும் மற்றவரு மொருவர் செய்யுங்
கடுமையினிற் கலுழும்வகை யொத்து மொவ்வார்
செற்றவர் மேலுறுஞ் செயிர்க்கு நோவர்நல்லோர்
தீயுடன் மேலுறுஞ் செயிர்க்கு நோவர்தீயோர்."
—அஞ்ஞவதைப்பரணி.

† 1. மோகவதைப்பரணி. 2-4 திருவாசகம். 3 - அப்பர்தேவாரம். 5 - அஞ்ஞவதைப்பரணி. 6 - 8 திருக்குறள். 7-9 தாயுமானவர்.

லழித்து விடாதோ" (10) என நடுங்கி மனுதிதத்துவங்கள் யாவும் கழல பிரமானந்தானுபூதியில் திளைத்து, "கடம்படு மிவ்வுடம் பானேங் கரணமானேங் கண்டிருக்குங் கரியானேங் காட்சி தீர்ந்த, திடம்படுபே ருணர்வானே மெல்லா மானேந் திருவிளையாட் டிருக் கின்ற செயலீதென்னே" (11) எனவியந்து "இறவிலெப் பதமும் பெறவேண்டிலே னென்றும், பிறவி வேண்டுவ னின்றிருப்பணி செயப்பெறினே" (12) எனத்தனக்குதவிய பேரருளைப் புகழ்ந்து "இவ்வுடம் புடனிருந்து முத்திக்கே யிருந்தோம்" (13) என ஆனந்த கானம்பண்ணிச் சித்தம் சிவமாகவும் செய்தனவே தவ மாகவும் வாழும் ஜீவமுத்தர்களின் ஞானமார்க்கத்திற்கும் உள்ள பற்பல பொருத்தங்கள் சற்றேனும் சமநிலையாய் உசாவுவோர்க் குப் புலப்படாததல்ல. அவ்விதம் புலப்படில் முற்கூறியபடி ஆரம் பித்த மதநூல்களோடு இறுதியாய்வந்த ஞான யோகமானது ஐக்கியப்பட்டு ஒரு மண்டலப்படும் வகையும் விளங்காதிராது.

இவ்விதம் நூல்கள் யாவும் ஒரு மண்டலப்படுவது வியப் பான ஒரு இயல்பேயன்றி வலிந்து பொருத்தியதன்று. அதற்கு அம்மண்டலத்துள்ள இயல்பான சந்திகளைக் குறிப்பித்தலே போதுமாயிருக்கும். அறிவினை விளக்கும் கருவிகளாகிய நூல், அவ்வறிவின் இயற்கைக்கிசையத் திரிபுடிரகிதமாய் அறியும்பேரறி வினைப்பற்றிய மதநூலாகவும் சாதாரண மனிதர்க் கியல்பாயிருக் கும் தற்போத அறிவினைக்குறித்த பொதுநூலாகவும், தற்போ தத்திற்குக் கீழ்ப்பட்டதாயும் கருவிகளின் வாசனுருபமாயும் நிற் கின்ற அறிவினைத் தலைமைநோக்கிப் புலனறிவெனப் பெயர்கூறி அதனை முன்னிட்டவற்றைக் கலைநூலாகவும் வகுக்கப்பட்டது. இவற்றுள் சிற்சிலருக்கு மாத்திரம் அனுபவம் வரக்கூடியதாயும், மற்றையருள் பெரும்பான்மையாரால் நம்பப்பட்டு அடையத் தக்கதென விரும்பப்படுவதாயும் சிறுபான்மையாரால் ஐயுறத் தக்கதாயும் நிற்கின்ற பேரறிவினைப்பற்றிய மதநூல்விஷயம் பொதுப்பட மனிதருக்கு வந்தியமானமாய் நிற்பதினுல் அதனை முதலாகவும்; யாவராலும் பொதுவாக ஒன்றுபோல் அங்கீகரிக்கத் தக்க சாதாரண அறிவின் விஷயங்களைப் பொதுநூலி னுட்படுத்தி அதனை நடுவாகவும்; ஆராய்ச்சிக்கு விரிவாய் இடங்கொடாமல் காரியசித்தியின் பொருட்டுப் பழகுவதற்கே விசேடமாக உரித்

10. ஒழிவிலொடுக்கம். 11. மோகவதைப்பரணி. 12. சசிவர்ன போதம். 13. பாடுதுறை.

தாய்விளங்குங் காரணவிசேடங்களைப்பற்றிய கலைநூல்களை இறுதியாகவும் நிறுத்தியது இயல்பிற்கு விபரீதமன்று. பெர்துவாய் நூலெனும் பெயர்க்குச் சிறப்புரிமையுடைய பொதுநூல்களை நூலிலக்கணம் அமையுந்தன்மைநோக்கி முதநூல் வழிநூல் சார்பு நூலெனவகுத்து, அவற்றுள்ளும் தலைமையான முதனூல்களைத் தத்துவமுதல் உளநூல் பரியந்தம் பிரித்துமேல் ஆராயும்போது, முன்குறித்தபடி அவை தம்முள் ஒரு மண்டலப்படுவதுமன்றித் தத்துவநூல்விஷயம் மதநூல் விஷயத்தோடு நெருங்கிய சம்பந்தமுடையதாகவுங் காணப்பட்டது. இதுவே நூல் மண்டலக்கோவையில் முதற்சந்தி. நூலிலக்கணம் படிப்படியாய்க் குறையவழிநூல் கடந்து சார்புநூல்வரையும் ஒருதொடராகவே வந்து காரியசித்தியே முழுதுங் கருத்தான சிற்பநாவிகம் முதலான சார்பு நூல்களுக்கும் அஃதே இலக்கணமாகவுடைய கலைகளுக்கும் பேதம் தோன்றுவது அருமையாய் நிற்பது, எவ்வளவும் இயல்பேயான இரண்டாம் சந்தியாய் நூல் மண்டலத்தைக் கோவை பண்ணுகின்றது. அத்தொடர்புவழி கலைநூல்களுள் இறங்கி அவற்றின் இலக்கணத்தை ஆராயும்போது அவை பொதுக்கலை யோகக்கலையென இருபெரும் பிரிவாக விளங்கின. இவ்விருபிரிவிற்கும் கரணவேற்றுமை மிகவும் இருப்பினும் பொதுக்கலை விகற்பங்களான சித்திராதி நற்கலைகள் சிற்சில விசேட மனோதருமங்களையும் பக்குவ நியமங்களையும் அபேக்ஷிப்பதினால்அவை இரண்டிற்கும்நடுநின்று யோககலைகளைச் சாதாரண கலைகளோடு பொருத்தும் சங்கிலியாகப் பவித்து நூல் மண்டலத்தின் மூன்றாம் சந்தியாக நிற்கும். அவ்வழியே யோககலைகளை ஆராயப் புகுந்து அவற்றில் இக்காலத்தியருக்குப் பிரபலமான மித்தியாதிருட்டி இருக்கக்கண்டு "தேரற்க யாரையும் தேராது" என்னும் ஆன்றோர் மொழியினைச் சிறிது வற்புறுத்தி அவற்றினை அறிந்த அளவும் சோதனைசெய்த எல்லை, அவை பொதுக்கலைகளைப்போலவே, ஞானயோகமென்னும் ஒருநற்கலை விகற்பமுடையதாய்க் கண்டு, அவற்றின் இலக்கணத்தை உற்றுப்பார்க்குங்கால் ஆதியில் ஆரம்பித்த மதநூலோடு உத்தேச ஒற்றுமையும் அனுஷ்டானப் பொருத்தமும், அடையும் அனுபவ ஐக்கியமும் தாமேவந்து முன்னின்று நூல்மண்டலத்தைப் பூரணப்படுத்தும் இறுதியான சந்தியாக அமைந்தது. இவ்விதம் வியப்பாயும் இயல்பாயும் விளங்கும் திரிசந்தியா விசைக்கப்பெற்ற

நூல் மண்டலமானது எத்தேவாலயத்தின் பிரகாரமோ, எத் திவ்விய மங்களவிக்கிரகத்திற்கு அர்ப்பிக்கத்தக்க கற்பூர நீராஞ் சனமோ, உதயாஸ்தமனமற்ற எந்த ஞானசூரியனுடைய பிரபைக்கு இசைந்த பரிவேடமோ, அப்பரம்பொருளின் ஆதீ னமே சகல மங்களமும்.

ஓம் தத்சத்.

---

தொடர்புறு மிந்நூற் றேகைச்சுடர் மண்டல
மேப்பரம் பருக்கர்க் கியைபரி வேட
மப்பொருட் கனுதின மகிலமங் களமே.

குருசுந்தரசரணாலயம்.

---

# அநுபந்தம் I.

## நூல்வகுப்பு

- **நூல்**
  - இயற்கை அறிவினுயர்ந்த.
    - பேரறிவு விஷயம் மதநூல்.
  - இயற்கை அறிவாகிய சிற்றறிவு விஷயம். பொதுநூல்.
    - முதனூல்.
      1. தத்துவநூல்.
      2. கணிதநூல்.
      3. சத்திநூல்.
      4. இரசாயனநூல்.
      5. உயிர்நூல்.
      6. உளநூல்.
    - வழிநூல்.
      - சோதிடநூல்.
      - பௌமியநூல்.
      - வியாகரணம்.
      - இவை போல்வன.
    - சார்புநூல்.
      - தருக்கநூல்.
      - தருமநூல்.
      - சிற்பநூல்.
      - நாவீகம்.
      - தனுர்வேதம்.
      - ஆயுள்வேதம்.
      - இவை போல்வன.
  - இயற்கை அறிவிற்றாழ்ந்த.
    - புலனறிவு விஷயம். கலைநூல்
      - பொதுக் கலை.
        - சாதாரணகலை.
        - நற்கலை.
          - கீதம்.
          - சித்திரம்.
          - கவி.
          - இவை போல்வன.
      - யோககலை.
        - அஷ்டாங்க யோகம்.
        - ஞானயோகம்.

குறிப்பு. —ஞானயோகம் மதநூலோடு ஒன்றுபட்டு நூல் வகுப்புகள் மண்டலப் படுகின்றன.

# *The Departments of Knowledge as Classified in*

## நூற்றொகை விளக்கம்




*N. B.* ஞானயோகம் by running into Theology completes the circle of the Sciences.

## அநுபந்தம் II.

| பக்கம். | சங்கேதமொழி. | ஆங்கிலேய பிரதிபதம். |
|---|---|---|
| 3 | நூல். சாத்திரம். | Organized Knowledge: a Department of thought: Science (in its wider sense.) |
| 4 | அறிவு. போதம். ஞானம். | Consciousness. |
| ,, | பேரறிவு. திரிபுடிரகிதஞானம். | Universal, Impersonal, or Unconditioned Consciousness. |
| ,, | தான் பிறர்: அஹம் இதம். | Ego and Non-ego: Subject and Object. |
| ,, | துவிதநாட்டம். | The Duality implied in Consciousness. |
| ,, | திரிபுடி. | Subject knowing: Object known and the act of Knowing. |
| 5 | மதநூல். | Theology, as a study of the Absolute. |
| 6 | சிற்றறிவு: ஜீவபோதம். | Phenomenal Knowledge: Conditioned Consciousness. |
| ,, | பாஹியாந்தரவிஷயம். | Objective and Subjective phenomena. |
| ,, | பொதுநூல். | Departments of Human Knowledge: Organized Knowledge of phenomena. |
| 7 | உண்மை; உண்மைப்படுத்தல். | Truth: Verification. |
| ,, | பொதுமை. | The Generalized. |
| ,, | ஒழுங்கு. | Method: System: Order. |
| 8 | தனிமை. | The Individual: The Particular. |
| 9 | இலக்கணங்கூறல். | Definition. |
| ,, | சங்கேதமொழி. | Technical Term. |
| ,, | வெளிப்படை. | Simple; Easy of Comprehension. |
| ,, | ஒப்புவெளிப்படை. தனித்தாபிதம். | Postulates and Axioms. |
| 10 | இலகுதாபிதம். | Simple; Easy of demonstration. |
| 11 | கேவலம். | Abstract. |

| பக்கம். | சங்கேதமொழி. | ஆங்கிலேய பிரதிபதம். |
|---|---|---|
| 12 | அகேவலம். | Concrete. |
| 14 | முதனூல். | Fundamental or Departmental Sciences. |
| ,, | வழிநூல். | Derived Sciences. (*Bain.*) |
| 14 | சார்புநூல். | Practical Sciences. |
| 15 | இருக்குகை. | Pure Being. |
| ,, | தோற்றுகை. | Pure Knowing. |
| 16 | தத்துவம். | Fundamental Active Principles : Idea (*Hegel.*) |
| ,, | தத்துவநூல். | Philosophy Proper: Metaphysics. |
| 17 | எண். எண்ணம். | Number. |
| ,, | அளவு. விததி. | Extension. |
| 19 | அளவுநூல். | Geometry. |
| ,, | கணிதநூல். | Mathematics. |
| ,, | அங்ககணிதம். | Arithmetic. |
| ,, | பீஜகணிதம். | Algebra. |
| ,, | சமக்ஷேத்திரகணிதம். | Plane Geometry. |
| ,, | கோளகணிதம். | Spherical Geometry. |
| 20 | கேவலநூல். வித்தை. | Abstract Sciences. (*Spencer.*) |
| ,, | இயக்கம். | Motion. |
| 21 | சாங்க இயக்கம். | Molar Motion. |
| 22 | சாமிய சாங்க இயக்கம். | Equilibrium. Statics. |
| ,, | அசாமிய சாங்க இயக்கம். | Motion caused by Unequal Forces. Dynamics. |
| 22<br>23 | கடினம், நெகிழ்ச்சி, ஆவி:<br>நிலம், நீர், கால். | Solid, Liquid and Gas. |
| ,, | அணு. | An indivisible particle. |
| ,, | அணு இயக்கம். | Molecular Motion. |
| 24 | மூல அணு. அவ்வியாகிருத அணு. | An Atom: An indivisible particle in Chemistry. |
| ,, | கலப்பணு. வியாகிருத அணு. | A Molecule: An indivisible particle in Physics. |
| 26 | மின்மயம். | Electricity. |
| 27 | சத்திநூல். | Physical Science. |
| 28 | ஜலஜனகவாயு. | Hydrogen Gas. |
| ,, | அனலன். | Oxygen. |
| ,, | முறை. | Ratio. |
| ,, | சரிமுறை இணை. | Proportion. |
| 28 | ஐக்கியமுயக்கம். | Chemical Union. |

| பக்கம். | சங்கேதமொழி. | ஆங்கிலேய பிரதிபதம். |
| --- | --- | --- |
| 29 | வெறுங்கலவை. | Physical compound: Mechanical mixture. |
| ,, | இரசாயனநூல். | Chemistry. |
| 32 | சாரீரிக இரசாயனம். | Organic Chemistry. |
| ,, | இயற்பொருளிரசாயனம். | Inorganic Chemistry. |
| 34 | உயிர்: ஜீவன். | Life: the Principle of Organic Bodies. |
| ,, | உறுப்பு. | Organ. |
| ,, | உடம்பு. | Organism. |
| 35 | உண்ணல். | Assimilation of food. |
| 36 | உற்பாதனம். பிரத்தியுத்பாதனம். | Reproduction. |
| 37 | தாவரம். | The vegetable kingdom. |
| ,, | மழைப்பூப்பு. | Mildew. |
| ,, | சரவுயிர். | The animal kingdom. |
| 38 | புலன். | Sense. |
| ,, | புலால். | Muscle. |
| 40 | அங்கவிபாகம். | Anatomy. |
| 41 | அங்கவியாபாரம். | The function of Organs. |
| ,, | அங்கவியாபாரநூல். | Physiology. |
| ,, | பிரதமஜீவி. | Protozoa. |
| ,, | சக்கரரூபி. | Radiata. |
| ,, | சிப்பிவாழுயிர். | Mollusca. |
| ,, | கீடாதி. | Arthrozoa. |
| ,, | வீணைத்தண்டி. | Vertebrata. |
| ,, | அண்டஜம். | The Oviparous. |
| ,, | சராயுஜம். | Mammalia. |
| 42 | உயிர்நூல். | Biology. |
| 44 | உளம். அந்தக்கரணம். | Mind. |
| ,, | புலனறிவு. | Sense Impression or Animal Intelligence. |
| ,, | புலாற்றொழில். | Reflex action. |
| ,, | இச்சாஞானக்கிரியை. | Feeling, Thought and Will. |
| 46 | மனம். | Sensation and Perception: Presentative Faculty. |
| ,, | புத்தி. | Ideation and Comparison. |
| ,, | சித்தம். | Emotion. |
| ,, | அகங்காரம். | Conation. |
| ,, | கோசம். | Continuum (*Dr. James Ward*) |
| ,, | மனோமயம். | Presentation-Continuum. |
| ,, | விஞ்ஞானமயம். | Ideational Continuum. |

| பக்கம். | சங்கேதமொழி | ஆங்கிலேய பிரதிபதம். |
| --- | --- | --- |
| 45 | ஆனந்தமயகோசம். | The Emotions or the Feelings considered as 'subjectively subjective' (*Hamilton.*) |
| 46 | பிராணவிகாரம். | Nerve modification. |
| ,, | உளநூல். | Psychology. |
| ,, | அகமுகப்பார்வை. | Subjective attitude. |
| ,, | வெளிமுகப்பார்வை. | Objective attitude. |
| 47 | விருத்தி, அந்தக்கரண பரிணமம். | Mental modification. |
| ,, | வாசனநியமவிதிகள். | The Laws of Association. |
| 48 | தூமகேது. | Comets. |
| 49 | சோதிடம். | Astronomy including Astrogeny. |
| ,, | பௌமியம். | Geography, Geology & Geogeny. |
| 50 | வியாகரணம். | Grammar including Philology. |
| 51 | தருக்கசாத்திரம். | Logic in its practical aspect. |
| 52 | தருமசாத்திரம். | Ethics as a practical Science. |
| ,, | சிற்பநூல். | Architecture and Engineering in all its branches. |
| 53 | நாவீகம். | Nautics. |
| ,, | தனுர்வேதம். | The Practical Science of War. |
| ,, | ஆயுள்வேதம். | The Medical Science. |
| 56 | ஆமாசயம். | Stomach. |
| ,, | பக்குவாசயம். | Intestines. |
| 57 | வாசனை. | Association. |
| ,, | பழக்கம். | Habit. |
| ,, | இப்பிறப்பிலடையாப்பழக்கம். | ஜன்மாந்திரவாசனை according to Hindu Philosophy; Organized ancestral experience, according to the Evolutionists. |
| ,, | கலை. | Art. |
| 58 | பொதுக்கலை. | Ordinary Arts. |
| ,, | யோககலை. | Psychical Arts such as Hypnotism. |
| ,, | நற்கலை. | Fine Arts. |
| ,, | கலைநூல். | Rules of Art. |
| 59 | அழகிற்கேற்ற மனோதருமம். | Aesthetic sensibility. |
| 60 | இந்திரியசாதுரியம், | Delicacy of the sense. |

| பக்கம். | சங்கேதமொழி. | ஆங்கிலேய பிரதிபதம். |
|---|---|---|
| 60 | பக்குவ வேறுபாடு. | Stages of development. |
| 61 | ஏகதேச வாக்கியம். | Approximate truth. |
| 63 | வசீகர நித்திரை. | Hypnotic sleep. |
| 66 | பிராந்தி. | Illusion. |
| 67 | அகம்புத்தி. | Sense of Personal Identity. |
| ,, | தாதான்மியம். | Illusory transfer of the sense of self. |
| ,, | வசீகர ஜாக்கிரம். | The 1st stage of Hypnotism where the subject is conscious of the illusion, called the 'alert state' (Gurney). |
| 68 | வசீகர சொப்பனம். | The 2nd or the 'intermediate' stage of Hypnotism where the subject retains memory and sensibility. |
| ,, | வசீகர சுழுத்தி. | The final stage of Hypnotism called the 'deep state.' |
| 70 | சஞ்சார நித்திரை. | Somnambulism. |
| 71 | கரும யோகம். | The Indian Practice of Self-Hypnotism. |
| ,, | ஞான யோகம். | The Union with the Absolute. |
| ,, | கரணசுத்தி. | Moral Purity. |
| 72 | சித்தைகாக்கிரியம். | Concentration of Attention. |
| ,, | ஆஞ்ஞா சக்கரம். | The Brain. |
| ,, | மூலாதாரம். | The lower end of the Spinal Cord. |
| ,, | நடுநாடி. | The Spinal Cord. |
| 74 | சுபாவ நியமம். | Uniformity of Nature. |
| 75 | அதிசயோக்தி. | Exaggeration. |
| 77 | இயற்கைப்பக்குவம் | Inherent tendency or qualification. |
| ,, | பயிற்சி. | Practice. |
| ,, | நியத சாஹசரியம். | Uniform co-existence. |
| 78 | பிறர்நினைவறிதல். | Thought-reading. Telepathy. |
| ,, | பேரானந்தம். | Beatitude, Bliss. |
| 79 | பலோத்தேசம். | End aimed at. |
| ,, | அனுஷ்டான மார்க்கம். | Mode of procedure. |
| ,, | நிஷ்டை. | Loss of self-consciousness. |

அநுபந்தம் முற்றிற்று.